082

பிசுமில்லா ஹிர்றகுமா னிர்றஹீம்.

1082

இஃது

# நாகையந்தாதி

## மூலமும் - உரையும்


காயற்பட்டணம்

ஹபீபுமுகம்மது லப்பையவர்கள் குமாரராகிய

புலவர்நாயகம்

**செய்கப்துல் காதிறு நயினார்**

லப்பை யாலிம்புலவ ரவர்களாற் செய்யப்பட்டது.


---

**கண்ணகுமது - மகுதூமுகம்மதுப்**

புலவரவர்களாற் பரிசோதித்தப் பிரதிக்கிணங்க.

---


கொழும்பு - செட்டித் தெரு, புஸ்தக வியாபாரம்,

அ[illegible] ராஜா அவர்களாற்

[illegible]ப்பட்டது.

[illegible] 12.



O 7 11MCM,N

N3

12554

பிசுமில்லா கிற்றகுமா னிற்றகீம்.

இஃது

# நாகையந்தாதி

## மூலமும் - உரையும்

காயற்பட்டணம்.
ஹபீபுமுகம்மது லப்பையவர்கள் குமாரராகிய
புலவர்நாயகம்
செய்கப்துல் காதிறுநயினர்
லப்பை யாலிம்புலவ ரவர்களாற் செய்யப்பட்டது.

---

கண்ணகுமது - மகுதூமுகம்மதுப்
புலவரவர்களாற் பரிசோதித்தப் பிரதிக்கிணங்க.

---

கொழும்பு - செட்டித் தெரு, புஸ்தக வியாபாரம்,
அருணசலம் & ராஜா அவர்களால்
பதிப்பிக்கப்பட்டது.

---

விலை அணு 12.

# விளம்பரம்



இந்த நாகையந்தாதியின் மகத்துவகாரணங்கள் கோடானுகோடியுள்ளன, அவைகளை இந்நூற்பாடின ஆசிரிய ரவர்களாற்சொல்லிய பாயிரமென்னு முக வுரை யானும் அந்தாதியி னகவற்றுறையானுங் கண்டுகொள்க.

அல்லாவென்னும் வல்லகடவுள் நன்மைக் குவப் புந், தீமைக்கு வெறுப்புமானவனுதலால் அவன் அஜலென்னும் விதியன்றி மற்ற மாரணம் பேய், பில்லி, சூனியம், வஞ்சனை, ஏவல், தீங்கு, பகை, துன் பம், நோய் முதலிய சங்கடங்கள்யாவு மிவ்வந்தாதி யைத் தூய்தாயுற்றுப்படிக்கிற் றீர்ந்து விடுமென்ப தற் கியாதொரு சந்தேகமுமில்லை இவை யுண்மை யென்றெவர்களு மறிவீர்களாக.

175521

2816

894.8111

பிசுமில்லா கிற்றகுமா னிற்றகீம்.

இஃது.

18 AUG 1931

இந்நூலாசிரிய ரவர்கள் தங்களுக்கு வேண்டிய காரியங்களைக் குறித்து முற்றுருங் குணர்ந்தமுழு முதலாகிய எல்லாம்வல்ல கடவுளிடத்திற் பெற்றுக் கொள்ளநாடி அவன் இவ்வுலகங்கள் அசையாது நிலைத்துநிற்கக் காலங்கடோறு முண்டாக்கு மகத்துக்களுக்கு நிலைகொள்ளச்செலுத்து நீதியின் குத்பென்றோங்கிய தலைமையி லொருவராகி நாகூரிடத்தில்வாழும் நாயகர் தம்மை முன்னிலைப்படுத்திச் சொற்றொடர் நிலையின் ஏகமுகமாக வியற்றமிழாற் புனைந்த நாகையந்தாதி.

இதனால் இத்தேயங்களி லுள்ள பெரியருஞ் சிறியரு மிகத்திற்காக வேண்டிய காரியங்களுக்காயினும், பரத்திற்காக வேண்டிய பலன்களுக் காயினும் (நிறைமொழிமாந்த ராணையிற் கிளர்ந்த-மறைமொழி தானே மந்திரமென்ப) என்று முன்னோர்கூறியவிதி பூண்ட இக்கவிகளை மனனமாக்கித் தியானஞ்செய்தற் காக அதன் கருத்துப் பொருளாகிய வுட்கோளைப் பாடாண் பகுதியிலணைந்த பலதுறைகளில் வாகைத் திணையில் அறிவன்றேயமுந் தாப்பத பக்கமு மென்ப

வற்றுட் பெரும்பான்மையும் அன்றி மற்றப் புறத் திணைகளிலும் அகத்திணைகளிலுஞ் சிறுபான்மையும் தெரிந்து துறையாகப்படுத்தி அந்தாதித் தொடரி னுக்குப் போந்த பொருளாக அகவலான் முடித்துக் கவிகளுக்கு முன்பாகக் கிளவியாக அமைத்தும், மேலு மிலக்கிய நூல்கள் வாசிப்பதற்கும் பொருணிலை யுணர்ந்து கோடற்கும் விரும்புவார்க்காக அக்கவி களின் சொற்றோறுங்கிடந்த கண்களையழித்துப்பிண் டித்தும் பொழிப்புரைசெய்தும், சொல்லது பொருள் களின் அண்மை நிலையாற்கூறிய வுரைகளை அவாய நிலையி லெடுத்துக்காட்டியும், தோன்றல் திரிதன் முதலாகிய விகாரமுணர்த்தற்காகப் பதங்களைச் சிதைத்தும், ஒருவாற்றானவர்களே யுரைசெய்தும், அவர்களாலே கிசுறத்து 1259-வருஷத்துக்குச் சரி யான சக 1764-வருஷம் தைமாதம் அச்சிற் பதிப் பித்திருந்த பிரதிப்படிக் கிப்போது கொளும்பு செட் டித்தெரு புஸ்தகஷாப், கா. உதுமான்கனி ராவுத்தர்.

---

அறுசீர்க்கழிலடியாசிரிய விருத்தம்.

தன்னுளத்தி னுறுமறிவைப் புறப்படுத்தி
மறைபொருளைச் சார்ந்தோர் கொள்ளு
மன்னுளத்தில்வெளிப்படுத்திப் பேறுகொள்வான்
வகுத்துரைத்த மதிதான் செய்யும்
புன்னுளத்தின் பொருள்சிறிய தெனினுமதன்
பயனேக்கிப் போற்றிக் கொள்வார்
இன்னுளத்தி னுறுதிநிலைத் தவத்தினரென்
றுவகையுண ரியல்பி னானே.

---

அந்தாதித்துறையினகவல்.

முதல்நபிக் குரிய முறைபொடு புணர்த்தி
நுதலிய பொருளை நுவன்று கேட்டலும்
ஒருநா னெறிக்கு முரியமுறை புணர்த்துங்
குருவே யென்றென் குறையிரந் துயர்த்தலும்
தற்பதி குறித்துத் தகைமையுங் குறித்துப்
பொற்பதமாட்சிப் பொருளை வியத்தலும்
அண்ணலது கருணை யம்பக நோக்க
மெண்ணிய பொருளொடு மியலு மென்றலும்
பெருந்தகை நாகைப் பிரபந்தியர் நண்பா

அருந்துயர் களையு மருட்டரு கென்றலும்
நயம்பெற முன்னர் நவந்தருந் தம்பலம்
பயம்பெற வின்னும் பகுத்தி ரென்றலும்
உயிரினைக் காக்கு மொள்ளிய கிருபையென்
துயரினுக் கமிர்தந் துய்ப்பி யென்றலும்
மறைபடு பொருளை வெளிப்படுத் தண்ணல்பால்
குறைபடுத் துள்ளங் கூம்பலென் னென்றலும்
விருப்ப நும்புகழ் வியந்தெழு கடற்கப்பா
விருப்பினும் மாணை யெளிதல்ல வென்றலும்
அணிமுகக் காட்சி யருளுக வென்றலும்
பிணிதுய ரொழிக பெருமன மென்றலும்
வன்புடை நஞ்சம் வைத்தவற் காக்கினை
துன்பக் காப்பினைத் தொலைத்திடு கென்றலும்
நீடிய நாகையி னிறையின் றகையுடல்
ஆடிய தானந்த மல்லவோ வென்றலும்
இரக்கம் வைப்பிரென் றெதிர்குறை யிரத்தலும்
வரத்தோர்க் கென்சொல் வறியதென் றிரங்கலும்
ஓகையி னடங்கி யோரூர் விடுத்திந்
நாகையி லுதய நயந்தன ரென்றலும்
பாதுக மின்னும் பயனுள வென்றலும்
சீதல ராயத்துள் சிறந்தன வென்றலும்

என்குறை புணரா திருந்திரே லதுநம்
நன்குறை பெருமையி னயமெனக் குறித்தலும்
துன்ப வினையிற் சுழல்வனே யென்றலும்
இன்ப நுகர்காட்சி யிதய நயத்தலும்
வண்டுது தாக வருந்திக் கேட்டலும்
வண்பத மாட்சி வழங்கிற் றென்றலும்
சொல்வின் கரியே தோற்றிற் றென்றலும்
மல்லல் கரமே மகிமைய தென்றலும்
ஆக்கத் திருப்பதத் தாண்டகை யென்னின்
தீக்கடைக் குணமெலாம் போக்குதி ரென்றலும்
செல்வர் வேந்தர் சீர்பல தாங்கிப்
பல்கா லுயர்நெறி பார்த்திவ வென்றலும்
சிற்றின வினையது செறியழ லகற்றிநம்
பொற்பதப் பந்தர் பூநிழற் றருகென்றலும்
புதுமையிற் புதுமை புணர்பிணிக் கொம்பருந்
துதிதரல் பாதத் தொடரியல் பென்றலும்
பொய்யொழுக் ககற்றிப் பொங்கறி வெவையு
மெய்பெற வருள்வதும் மேம்புக ழென்றலும்
பல்லெக் கழுத்தம் பயில்வர்நண் பகற்றி
நல்லொக்கல் மேலோர் நட்பருள் கென்றலும்
அஃறிணைச் சாதியோ டறைதர வல்லரென்

பகுமொழி யுணராப் பான்மையென் றென்றலும்
இரக்கு மெளியனை யின்னமு தருளிப்
புரத்தலே தருமப் பொருளிலொன் றென்றலும்
எங்கும் படர்ந்த வியல்சீ ருண்டென்
பங்கம் பழிப்பாற் பயமுமின் றென்றலும்
அவயவத் தியல்பி னுக்கங் கூறி
யுவகை பூண்பா னுள்ளந் தேற்றலும்
செறிபகை தருக்கஞ் சிறந்தோ ருளத்தைபு
முறைதவத் தடைவே முடிப்பரென் றுரைத்தலும்
பற்பல பிணிக்கும் பலன்பெறு நாகை
அற்புதர் வாயுரை யணிமருந் தென்றலும்
பருவர லுற்றுப் பாங்கியொடு தலைவர்
தெரிகில ரென்னெனச் சேயிழை வினாதலும்
ஓகை யறிவினோ டுள்ளுணர் வருளும்
நாகை யதிபதி நாமமே யென்றலும்
பொருணய மெல்லாம் பொலியுமென் கோமான்
கருணையங் கண்ணினாற் கணித்தவர்க் கென்றலும்
முறையில ரியல்பை முறைமையென் றுணரா
திறைமொழி போற்றுக விதய மென்றலும்
நாகையர் புகழெழி னாடுக வஃதோ
யோகையின் மரக்கல முடம்பே யென்றலும்

உலகெலா நிலைக்கு மொருமுளை போன்று
நலனுறு நாம நாயக ரென்றலும்
மாதர் மயக்க மறுத்தே யொருமை
நீத வழியி னிறுத்துவ ரென்றலும்
மருவிழாப் புன்மை மாற்றிவிட் டுயர்த்துந்
திருவிழா நந்தஞ் சீர்பத மென்றலும்
அச்ச வுள்ளத் தருந்துயர் நோய்க்கும்
பச்சைப் பொற்கழல் பசுமருந் தென்றலும்
உரியின மோம்பு மொள்ளிய கருணையால்
அயர்சுமை யிறக்கி யாளுக வென்றலும்
மனக்கணின் கவலை மாற்றுநம் பொற்றாள்
எனக்கினி தருளி யிரட்சி யென்றலும்
முரண்படு நெஞ்சினர் முதுசின வெஞ்சினர்
சரண்படும் வென்றித் தார்புய ரென்றலும்
நாகைய ரின்ப நறைபல னளித்தும்
வாகையர் முன்னும் வள்ந்தரு மென்றலும்
செல்வரும் புலவருந் திரமோ லியரும்
நல்வகை முகக்கு நனிகழ லென்றலும்
கண்ட பொழுதே கதிகரு முகத்தை
யுண்டென் கிளவியா லுவமித் துரைத்தலும்
புட்பா னீதம் பொருத்தினீ ரெளியேன்

கட்பா லருட்கண் கணித்தி ரென்றலும்
நந்நபி மரபி னவமணி யறிஞர்
தந்நனி யுள்ளத் தவமணி யென்றலும்
நாட்டணி கூறி நாகைய வின்பம்
பூட்டிய விழியருட் புகல்தரு கென்றலும்
உட்பகை புறப்பகை யொக்க முடித்தே
கொட்புறு திருநெறி கொண்டபொரு ளென்றலும்
நிலைத்தவென் னறிவு நீரே யாகில்
உலைத்தலில் சுகமே யுடற்கோங்கு மென்றலும்
ஒன்றிய பொதியத் துயர்தமி ழதனிற்
றென்றற் றாதினைச் சிறப்பக் கூறலும்
நவநிலை யமைந்த நாகையின் வள்ளல்
அவயவத் தன்மையின் ஆக்கங் கூறலும்
வேந்தர்க டொண்டினும் விழுமிய துயர்தீர்
மாந்தர்கள் வாழ்த்தும் வாயுரை யென்றலும்
சேயக மேன்மைச் சிறப்பி னுலக
நாயகன் கையினது நலனய முரைத்தலும்
என்குண மறியா தென்னெனக் கிளவி
தன்குணப் பாங்கி யொடுதான் வினைதலும்
பூரணப் பொருளிற் புகழொடு தோன்றும்
காரணப் பெயரின் கருத்தறி வித்தலும்

ஊர்வளங் கூறி யுயர்போ தகஞ்சேர்
ஏர்களி றுருத்தி யென்றுகை தொழுதலும்
ஒண்டொடி வாட்ட முணர்ந்து செவிலி
கண்டதோ ழியொடு கையறை கூறலும்
அண்ணல் பெரும்பதி யணிகொள் மனறு
வண்மையின் றன்மை மதித் துரைத்தலும்
அணிகதி யுதவு மரியகற் பகமே
கணிகையிற் படாது காத்தி யென்றலும்
கற்புடை நாயகிக் கண்மணி பேர
கற்ப மளித்தெனைக் காத்தி யென்றலும்
வசந்த காலத்தும் வனந்திகழ் அஃறிணை
இசைந்தேத் துவநும் மிசையே யென்றலும்
பல்வள நாடணி பதிநா கூர
கல்வியி னருட்கடை கணித்தி யென்றலும்
பம்மிய வெறுமை பவப்பிணி யிவற்றின்
வெம்மை யகற்றும் விழைபுய லென்றலும்
நாட்டணி கூறி நணிபுகழ் தலைமைச்
சூட்டணி குருவின் றன்மை யுரைத்தலும்
துயர்பல நீக்கித் தொல்லை வடிவின்
நயனருள் சஞ்சீவி நாகைமதி யென்றலும்
தீவினை யிருவறச் செழுங்கதிர் விரிக்கும்

மாவினை விளக்கு மதியென் றுவ மித்தலும்
கற்றோ ருளத்துங் காசினி நாகையும்
உற்றோ ரறிவி னுயர்கட லென்றலும்
இபுலீ சவாப்பெண் ணிவ்வுல கிவ்ற்றிற்
கபய நுந்தா ளடைந்தே னென்றலும்
எழிறருங் காவ விறைசொல் லுள்ளார்
கழிதர மொழியார் கனவிலு மென்றலும்
இத்தகைச் சிறைநீத் தெளியனை நுந்தாள்
உத்தமக் காப்பி னுய்த்தி ரென்றலும்
சித்தியி லாதவென் சிந்தை யிடத்தினும்
மித்திரன் போலருள் வித்திரென் றிரத்தலும்
நாகை விளங்க நண்ணின ரின்பப்
பாகினி தருள்வான் பாடின னென்றலும்
பசப்புறு கோலம் பார்த்திவ ராலென்
றிசைத்தயர் கிற்பா ளேந்திழை யென்றலும்
அறிவுளங் கலங்கு மந்தகர் தமக்கோர்
நெறிதரு மூற்றுக்கோ னீர்மையி ரென்றலும்
ஒங்குமெண் டிசைமா வூக்கிய கொற்றவ
தாங்குநுங் கையாற் றமியனை யென்றலும்
ஆக்கைக் கிழிகுண மகற்றி நன்மையின்
ஊக்கம் புரிய வுதவிசெய் கென்றலும்

அண்ண லணிகழ லரவிந்தம் பூத்தற்கென்
கண்ணுங் கருத்துங் கனியிட னென்றலும்
காரணர் மரபார் கண்ணேக் குறுமேல்
சீரணம் பிணிபல செல்லு மென்றலும்
பல்பிணி கண்டித்துப் பண்பின தாக்கை
நல்குதிர் கொடையி னுபக வென்றலும்
குரிசில் மணத்தால் குளிர்ந்துளம் விகாரப்
பொருள்பல வொழுகிப் புகழு மென்றலும்
துயர்தருந் துன்பச் சூளையர் ஞாங்கர்
மயலனு காது மறுத்தியென் றுரைத்தலும்
வள்ள லமுத வசனத் துலகத்
துள்ள பொருடிரு வொருங்கெய்து மென்றலும்
சில்வினைத் தொழில்கட் சீத்தொரு மைப்பால்
நல்வினை தருமிறை நனிமொழி யென்றலும்
நன்னய நாகை நாயக ருவகை
இன்னன பொருளி னியல்பின தென்றலும்
அரும்பொருள் கண்ட ஆண்டகை யடிமை
விரும்பத் துயர்தந்த விழுமமென் னென்றலும்
ஏழைதுயர் தீர்ந் தேத்துதற் கென்றும
வாழிநுஞ் சரண் வையகத் தென்றலும்
இன்கனிந் தருள்கநும் மிரும்புயஞ் சிறக்கும்

பொன்குங் குமத்தொடை புலவற் கென்றலும்
பிணியிரு ளகற்றிப் பிரகா சிக்கும்
அணிவிளக் காதிர் நும் மருங்கவிக் கென்றலும்
நன்னபி யருநெறி நடப்பவிவ் வுடற்கும்
இன்னருள் காட்சி யெழிலுண வென்றலும்
கல்லொடு பகர்ந்த காரணக் குரிசில்சீர்
புல்லிய நுங்கழல் புகலிட மென்றலும்
நந்நபி யாணை நாயக நுங்கையால்
என்முக நீவி யிரட்சிப்பி ரென்றலும்
மாண்டகை தாய்தந்தை மனைகிளை நண்பெல்லாம்
ஆண்டகை யாணைநும் மடைக்கல மென்றலும்
பொருத்துநுங் கருணைப் பொருளை யன்றி
மருத்துவ மின்று மாதவமே யென்றலும்
ஆகிய வினைத்து மகத்திணை புறத்திணை
பாகினிற் றெரிந்து பாடாண் பகுதியாற்
பண்புறு நாகைப் பார்த்திவ ராற்பெறு
நண்புறை பரிசில் நாடிய செய்யுட்குக்
கருத்துந் துறையுங் காரண
அருத்தமு மாக வமைத்தனர் கொளலே.

**அந்தாதித்துறையினகவல்-முற்றிற்று.**

---

பிசுமில்லா கிற்றகுமா னிற்றகீம்.

இஃது

# நாகையந்தாதி

## காப்பு.

கட்டளைக் கலித்துறை.

மணியொளிபோலு மலர்மணம்போலு
மருவியுயிர்க்
கணியொளிபோன் றவுண் மைப்பொருளேயக
முஞ்சுகமும்
கணியொளிர்மேதையுந் தந்தருள்வாய்அப்துல்
காதிர்புகழ்ப்
பணியொளியாநிதி நாகையந்தாதி
படிப்பவர்க்கே.

## நூன் முகம்.

முதல்நபிக் குரிய முறையொடு புணர்த்தி
நுதலிய பொருளை நுவன்று கேட்டது.

மாதவக் காரண வாரணத் தார்மகு
மூதளித்த
மாதவர்க் காருயி ராருயர் தோன்றல்
மறபுடையீர்

மாதவக் காக்கைய னேப்க்கறை போக்குக
வண்சிறகின்
மாதவக் கான்மலர்த் தேன்றட நாகை
மகிபதியே.

என்பது-பெரிய தவத்திற்குக் காரணமாகிய வேதத்தையுடைய மருமூதென்னுங் காரணப் பெயரையுடையவர் பெற்ற மகளாருக்கு நிறைந்த வுயிரன்னராகிய மக்களிருவரிற் பெரிய மகனரது வங்கிஷத்தில் வந்தவரே; வெறுக்குந் திகைப்பி னுடலையுடைய நாயென்னது நோயாகிய குற்றத்தைப் போக்கிவிப்பீராக, அழகிய சிறகினையுடைய வண்டினங்கள் பாயவொழுகும் பூக்களின் றேனுலாகிய தடாகத்தையுடைய நாகூரையாளு மரசரே யென்றவாறு.—மா-பெருமை, தவம்-தவசு, மாது-மகள், அவர்-சுட்டுப்பெயர், மா-வெறுப்பு, தவக்கம்-திகைப்பு, மா-வண்டு, தவ-தாவ. (1)

ஒருநா ளெறிக்கு முரியமுறை புணர்த்துங்
குருவே யென்றென் குறையிரந் துயர்த்தது.

பதியே மநனி மருநபி மாதுலர் பண்பறிவுட்
பதியே மநனி மருகரிந் நால்வர் பகர்நெறிதீப்

பதியே மகனி மருவாதி யார்க்கும் பயிற்றுமுயர்
பதியே மனநிமி ரும்பொரு ளுகைப் பதிக்கரசே.

என்பது - எப்பொருட்கு மிறைவனது காவல் மிகுந்த மணமுள்ள நபிநாயகத்தின் மாமனாரிருவர், பண்புள்ள அறிவுகளை யுட்பதிந்த புதையலாகிய பெருமையுடைய மருமக்களிருவர், இந்நால்வருஞ் சொல்லும் வழிபாட்டை யாவருக்குந் தீநகரத்திருளி னது நெருக்க மருவாமற் பயிற்றுவிக்கு முயர்ந்த குருவே மனங்களி னிறைந்துயர்ந்த பொருளே நாகூரிற் கரசரே யென்றவாறு.—பதி - இறைவன், ஏமம்-காவல், நனி-மிகுதி, பதி-பதிந்த, ஏமம்-புதை யல், நனி-பெருமை, பதி-நரகம், ஏமம்-இருள், நனி-நெருக்கல், பதி-குரு. (2)

தற்பதி குறித்துத் தகைமையுங் குறித்துப்
பொற்பத மாட்சிப் பொருளை வியந்தது.

பதிக்கு மணிமுடி மீதே சிறக்கும் பருமணிப்பேர்
பதிக்கு மணிமுடி யாதன வில்லைநும் பாதமலர்ப்
பதிக்கு மணிமுடி யாளருக் கேபடர் பாயிருள்சீப்
பதிக்கு மணிமுடி நாற்றெறங்குநாகையம் பார்த்திவரே

என்பது-அரசருக்கிரத்தின மகுடத்தின்கண்ணே சிறப்பினைத்தரும் பருமணியாகிய மாணிக்கத்தின் பெயர்கொண்ட வூருக்கும், மற்ற வூர்களுக்கும் அலங்காரமே உங்கள் பாதமலரைப் பதித்துக்கொள் ளும் அழகிய சிரத்தினை யுடையவருக்கு நிறை வேறாத கருமங்க ளில்லையே முடிந்த நாற்றின் வய லெங்குங் கிடக்கும் உழுந்தோறு மேரடித்த கரும்பி னது கணுக்களிற் றெறித்த முத்துகள் இரவுகாலத் திற் படர்ந்து பரவிய விருள்களை யொதுக்குவதாகிய மருதநிலத்தையுடைய நாகூரினைப் புரப்பவரே யென்றவாறு.—மாணிக்கப் பூருக்கும், நாகூருக்கு மலங்காரமே யென்றுமாம், பதி-அரசர், மணி-இரத் தினம், முடி-மகுடம், பதி-வூர், அணி-அலங்காரம், முடியாதன-நிறைவேறாத கருமங்கள், பதிக்கும்-பதித்துக்கொள்ளும், மணி-அழகு, முடி-சிரம், சீப் பது-ஒதுக்குவது, இக்கு-கரும்பு, மணி-முத்து, முடி-முடிதல். (3)

அண்ணலது கருணை யம்பக நோக்க
மெண்ணிய பொருளொடு மியலு மென்றது.

பார்த்திட்ட மாயை யொழிந்தோ ரொடுபஃ
றிக்கிணைக்கற்

பார்த்திட்ட மாக நடத்திவித் தோய்பல
காவிறையைப்
பார்த்திட்ட மாதவ நாகைமன் னவிந்தப்
பாவிமுகம்
பார்த்திட்ட மாகப் புரப்பீ ரிதுசவு
பாக்கியமே.

என்பது - பூமியாகிய மேட்டிடத்தினுள்ள மாயை யொழிந்த தபோதனர் நானூற்று நாலுபேரோடு கப்பலுக் கிணையாகக் கல்லாகிய பாறையைத் திடனுக நடாத்திவித்தவரே, பலகாலமு மிறையவனைத் தெரிசித்த பெரிய தவத்தை யுடையவரே, நாகூரின் மன்னவரே இந்தப் பாவியுடைய முகத்திரக்கத்தை நோக்கி மனத்தின துவப்புப்போல விரட்சிப்பீர், இஃது சுகமுள்ள பாக்கிய மென்கிறவாறு.—பார்-பூமி, திட்ட-மேட்டிடத்த, கற்பார்-பாறை, திட்டம்-திடன், பார்த்திட்ட-தெரிசித்த, பார்த்து-நோக்கி, இடம்-உவப்பு. (4)

பெருந்தகை நாகைப் பிரபந்தியர் நண்பா
அருந்துயர் களையு மருடரு கென்றது.

பாக்கலை யாவு முணர்ந்தோய் கமுகின்
 பழக்குலையின்
பாக்கலை யாமுத் துதிர்பொழி னாகைப்
 பதிவளரன்
பாக்கலை யாமதி யேகுரு வேபிர
 பந்தியர்நண்
பாக்கலை யாவரு ளீகவென் னோய்த்துயர்
 பற்றறவே.

என்பது - பாவினத்தாலாகிய நூல்களெல்லா முணர்ந்தவரே, கமுகமரங்கள் தம் பழக்குலையின் செங்கா யலைய முத்துதிராநின்ற தோப்பினையுடைய நாகூரில்வளரு மன்புடையவரே, கலைகணிறைந்த மதியமே, குருவே, யுங்கள் பிரபந்தஞ் சொல்வார்க்கு நண்புடையவரே, கலைந்துபோகாத கிருபையை யருள்வீராக வென்னுடைய நோயாகிய துயரத்தின் பற்றுத லற்றுப்போம்படி யென்றவாறு.—பா-பாவினம், கலை-நூல், பாக்கு-கமுகின் செங்காய், அலையா-அலைய, அன்பா-அன்பரே, கலை-சந்திரகலை, நண்பா-உறவாளரே, கலையா-கலைந்துபோகா. (5)

நயம்பெற முன்னர் நவந்தருந் தம்பலம்
பயம்பெற வின்னும் பகுத்தி ரென்றது.

பற்றும் பலரு மிருந்தாவ தென்னைப்
பகைப்பிணியால்
பற்றும் பலம்புந் துரவாய வுள்ளம்
பயன்பெறநும்
பற்றும் பலமின்னுந் தந்தருள் வீர்பது
மத்துறைதேன்
பற்றும் பலங்கமழ் நீராடை நாகைப்
பதிக்கிறையே.

என்பது-உறவாகிய வினமுறையார் பலரு மிருந்ததனால் ஆவதேது பலன் ஒன்றுமில்லை பகைத்த பிணிகளினால் பல கயிறுவிட்டலம்புந் துரவுபோலாகிய வென்னுள்ளம் பயன்களைப் பெற்றுக்கொள்ள உங்கள் பல்லாலாகிய தம்பல முன்னந் தந்ததுபோல வின்னமுந் தந்தருள்வீராகத் தாமரைகளிலுறைந்த வண்டுக ளன்புகொள்ளுஞ் செவ்வாம்பலின் மலர்கள் பரிமளிக்குந் தடாகத்தை யாடையாக வுடைய நாகூரிற் கிறைவரே யென்றவாறு.—பற்று-உறவு, ஆம்-ஆகிய, பலர் - பலபேர், பல் - பல, தாம்பு - கயிறு,

அலம்பு-அலம்புதல், பல்-பல்லு, தாம்பலம்-தம்பலம், பற்று-அன்பு, ஆம்பல்-செவ்வாம்பல், அம்-சாரியை. (6)

உயிரினைக் காக்கு மொள்ளிய கிருபையென்
துயரினுக் கமிர்தந் துய்ப்பி யென்றது.

இறைக்குங் குலிக விரற்பது மக்கை
யிளம்பிடி தான்
இறைக்கு முயிர்க்கும் பொருந்தியம் மண்ணையை
யீடழித்தீர்
இறைக்கு நபிக்கு மறைக்கு மினியவ
வென்பிணிக்கும்
இறைக்குங் கிருபை யளித்திநன் ஞகை
யிராசதரே.

என்பது - சாதிலிங்கத்துக் கொப்பாகிய வரையுடைய விரல்களுந், தாமரைமலராகிய கையையுமுடைய விளம்பிடிபோன்ற கன்னிகை தானாகிய கடமைக்கும் அவள துயிருக்கும் பொருந்தி நின்று முறைகொள்ளவரும் அந்தப் பசாசத்தின் வலியினை யழித்தவரே, யாண்டவனுக்கும், நபிக்கும் வேதத்திற்கு மினிமை யுடையவரே என்னுடைய நோய்க்கு

யாவருக்கு மிறக்குமுங் கிருபைதந் தருள்வீராக நல்ல நாகூரி விராசதத்தை யுடையவரே யென்றவாறு.— இறை-வரையிறை, குங்குலிகம்-சாதிலிங்கம், இறை-கடமை, இறை-ஆண்டவன், இறை-இறைத்தல். (7)

மறைபடு பொருளை வெளிப்படுத் தண்ணல்பால்
குறைபடுத் துள்ளங் கூம்பலென் னென்றது.

இராசித் தரும்பொருள் வல்லவன் பால்பெற்ற
வெம்மிறைசொல்
இராசித் தரும்பொருள் போனின்ற வாகிஸ்தி
யேந்தியந்த
இராசித் தரும்பதம் போற்றச் செய்தீர்பைய
வித்துயரால்
இராசித் தரும்புவ தோவுள நாகை
யிருப்பவரே.

என்பது - அந்தரங்கத் தடுத்து அருமையாகிய பொருள்களை யாண்டவனிடத்திற் பெற்றுக்கொண்ட நம்மிறைவராகிய நபிநாயகத்தின் சொற்றொடர் உணர்த்தித் தரும் பயன்போல நின்றவரே களவு செய்த கிஸ்தியினை யேந்திக்கொண்டு அந்த விரவின்

கண்ணே சித்தர்க ளுங்கள் பாதத்தைப் போற்றச் செய்தவரே உங்களடியன் இந்தத் துயரத்தி னுள் ளங்குவிந்து பொடிப்பதாமோ நாகூரி விருப்பவரே யென்றவாறு.—இத்துயரத்தி னுள்ளங் கூம்ப லாமோ - வென்றுமாம், இராசித்து - அந்தரங்கத் தடுத்து, அரும்-அருமை, இராசி-தொடர், தரும்-கொடுக்கும், இரா-இரவு, சித்தர்-மாயாவித்தை யுடையவர், இராசித்து - குவிந்து, அரும்புவது-பொடிப்பது. (8)

விருப்ப நும்புகழ் வியந்தெழு கடற்கப்பா
விருப்பி னு மாணே யெளிதல்ல வென்றது.

இருப்புக் கடலக நாகைமன் னுநும்
மிசையெனினும்
இருப்புக் கடலையென் னமெழு கேனுமின்
பம்பெறுங்காண்
இருப்புக் கடல்சுவை நெய்தேன் நன்னீரிக்குச்
சாறுடுத
யிருப்புக் கடவிட மேனு நும் மாணே
யெளிதல்லவே.

என்பது - பெருமை யமைந்து வெற்றி யுடைய அகன்ற நாகூரின்மன்னவரே, உங்கள்புக ழிரும்பா லாகிய கடலைப் பயறுயினு மென்னுடைய நாவுமெழு காயினு மின்பம் பெற்றுக்கொள்ளும், என்னெனில் ஓரடியவனிருத்தற்கு வலியுள்ள பால், நெய், தேன், நல்லநீர், கருப்பஞ்சாறு, தயிர், உப்பு, ஆகிய இவ் வெழு கடலிடமாயினு நினைத்தபோதே உங்களாக் கினை யெளிதல்லச் சென்று காக்குமாதலா னென்ற வாறு.—இரு - பெருமை, புக்கு - அமைந்து, அடல்- வெற்றி, இரும்பு-இரும்பு, கடலை-பயறு, இருப்புக்கு- இருத்தலுக்கு, அடல்-வலி, தயிர்-உப்பு, கடல். (9)

அணிமுகக் காட்சி யருளுக வென்றது.

அல்ல லரிந்தழ கேங்க மலர்நும் மடியவன்மெய்
அல்ல லரிந்த திருமுகக் காட்சி யருளிரைம்பால்
அல்ல லரிந்த மடவார் மயக்க மகற்றுளமெய்
அல்ல லரிந்தள மேந்திய நாகை யருந்தவமே.

என்பது-இரவுகாலத்தில் விரியுஞ் சந்திரனது அழகு திகைக்க மலராநிற்கும் உங்களடியவ னுட லிடத்து முன்னர் துன்பங்களை யறுத்த திருமுகத்

தின் காட்சியினையிப்போதும் அருள்செய்வீராக ஐந்து வகை சிகமுகையுடைய விருளாகிய கூந்தலின் மலர் கள்சூடும் இவ் வையக மடவாரின் ஆசை மயக்கம் அகற்றிய வுள்ளத்தையுடைய மெய்மையல்லாத தன் மை யல்லாராகிய பெரியோர்கள் தூபக்கால் ஏந்தி நிற்கு நாகூரில்வாழு மரியதவமே யென்றவாறு.— சந்திரன் அழகுகெட மலரு முகமெனக் கூட்டுக, அல்லின்மலரையுடைய மடவாரென்றுமாம்-ஐம்பால், அல்-கூந்தலென்றறிக, அல்-இரவு, அலர்-விரிதல், இந்து-சந்திரன், அல்லல்-துன்பம், அரிந்த-அறுத்த, அல்-இருள், அலர்-மலர், இந்த-இவ்வையக, அல்-அல்லாத தன்மை, அல்லர்-அல்லார். (10)

பிணிதுய ரொழிக பெருமன மென்றது.

அருந்த வருந்தத் தெவிட்டா வமுத
மறிவுளரும்
அருந்த வருந்தகை சிந்தா மணியள
வின்றியகை
அருந்த வருந்தரு நன்மன மேயொழி
யாகுலமெய்

அருந்த வருந்தலி லாதுயர் நாகை
யாகப்பொருளே.

என்பது-உ ர்ணவுண்ணத் தெவிட்டாத அமுத மும் அறிவுள்ளவரும் அரிய தவத்தை யுடையவரு நெருங்கிச்சென்று சிந்திக்குமணியும் அளவில்லாக கீழ்மக்களவரது இழிதொழில்விட்டு நேர்வழிபெறும் படி வாராநின்ற தருவுமாம் நல்ல மனமே நீ விபா குலத்தை யொழிவாயாக மெய்மையுடையார் உயர் தற்கு வருத்தமில்லாது உயரு நாகூரின் அகத்துள்ள பொருளே யென்றவாறு.—அகப்பொரு ளெழுவாய் க்கு அமுதம் மணி தரு, என்பன பயனிலையா மென் றறிக. அருந்த-உண்ண, அருந்தவரும்-அரிய தவத் தையுடையவரும், ததை-மிடைதல், கையர்-கீழ்மக் கள், உந்த-வழியேற, வரும்-வராநின்ற, மெய்யர்-உண்மையாளர் உயர்தற்கு, வருந்தல்-வருத்தம். (11)

வன்புடை நஞ்சம் வைத்தவற் காக்கினை
துன்பக்காப்பினைத் தொலைத்திடு கென்றது.

அகத்தடை பட்டுல காசையிற் பெற்ற
வருந்துயரின்

அகத்தடை பட்டுழல் வேனுக் கிரங்கி
யருளிர்மன்னன்
அகத்தடை பட்டநஞ் சிட்டவற் காக்கினை
யாலணிசொல்
அகத்தடை பட்ட துயர்கீர்த்தி நாகை
யரிக்குன்றமே.

என்பது-பாவத்தினுற் றடையுண்டாய்ப் பிரபஞ்ச வாசையினுற் பெற்ற வரிய துயரத்தை யுடைய மனத்தினிடை யடைக்கப் பட்டுழன்று திரியுமென க்கு இரங்கிக் கருணை செய்வீராக ஒருமன்னன் வீட்டி லாக்கிய அப்பத்திற் பொருந்திய நஞ்சினை யிட்டவ னுக்கே ஆக்கினீர் ஆகையால் அலங்காரச் சொல்வி டத்தி லடையின்றி யுயர்ந்த கீர்த்தியுடைய நாகூரில் வாழும் பொன்னின்மலையே யென்றவாறு.—சேர்ந்த வர் பயன்பெறும் பொருளே யெனக்கொள்க. அகம்-பாவம், தடைபட்டு - தடையுண்டு, அகம் - மனம், அடைபட்டு-அடைக்கப்பட்டு, அகம்-வீடு, அடை-அப்பம், பட்ட-பொருந்திய, அகம்-இடம், அடை-அடைச்சொல், பட்டது-இல்லாதது. (12)

நீடிய நாகையி னிறையின் றகையுடல்
ஆடிய தானந்த மல்லவோ வென்றது.

அரிக்கு மரிக்குழ லாலுல கேழு
மமையுமிருள்
அரிக்கு மரிக்குமரிக்குலங் காட்டிய மேன்மை
யறிவரெவர்
அரிக்கு மரிக்கு மரிக்கு முயரொளி
யங்கமன்றோ
அரிக்கு மரிக்குண நாகையி லாடிய
தானந்தமே.

என்பது-தாதுக்களை யரிக்கும் வண்டாகிய கூந்தலினவி நிறத்தாலுலகமேழு மிருளாக அமையுமத்தகை அழகிய கன்னிப்பெண்களைக் காட்டிய மேம்பாட்டினை யறிவா ரியாவர் ஒருவரு மில்லை சூரியனுக்குஞ் சந்திரனுக்கும் அக்கினிக்கும் உயர்ந்த வொளியுடைய உடலமல்லவோ வலிக்குங் காற்றின் றன்மையாகிய பேரின்ப மாடியது நாகூரிடத்தி னென்றவாறு.—நாகூரில் வலிக்குங் காற்றின் றன்மையாகிய பேரின்ப மாடிய துடலமல்லவோ வெனக்கொள்க, அரிக்கும்-அரித்தலைச் செய்யும், அரி-வண்டு, அரி-அழகு,

குமரி-கன்னிப்பெண்கள், அரி-சூரியன், அரி-சந்திரன், அரி-அக்கினி, அரிக்கும்-வலிமையைக் கொடுக்கும், அரி-காற்று. (13)

இரக்கம் வைப்பிரென் றெதிர்குறை யிரந்தது.

ஆநந்த மாறுபட் டார்முனங் கோல்கொண்
டடித்தெழுப்பி
ஆநந்த மாட்டி லளித்தீர் விண்போலு
மலர்ந்தபண்ணை
ஆகந்த மாமணி யால்திரு நாகை
யரசவைத்திர்
ஆநந்த மாதவ மேயடி யேன்பிணி
யாசறவே.

என்பது-சேர்ந்த தவத்தினராற் கோயில் காளை யென்று மாய அதற்குத் தற்கித்த மாறுபட்டவர்கள் முன்பாக என்பு தோல் கொம்பு இவைகளைக் குவித்துக் கையி னூன்றுகோலால் அடித்தெழுப்பி அதிஜயமுண்டாகப் பக்கத்திற்றந்தவரே சங்கினங்களாலும் அழகிய பெரிய முத்துகளாலுஞ் சந்திரரும் மீன் கணங்களு மொய்த்த வானத்தைப்போலும் விரிந்த வயலினையுடைய செல்வ நாகூரினையாளும் அரசரே

எங்கள் மாதவமே இரக்கம் வைப்பீராக அடியேனு டைய பிணியாகிய குற்றங்கள் அற்றொழிவதற் கென்றவாறு.—நந்து அம்மாமணியால் விண்போ லும் ஆம் அலர்ந்தபண்ணை யெனக்கூட்டுக ஆவைத்தி ரெனக்கொள்க. ஆ-காளை, நந்த-மாய, ஆ-அதிஜயம், நந்த-உண்டாக, ஆம்-ஆகும், நந்து - சங்கு, அம்- அழகு, மா-பெருமை, ஆ-இரக்கம் நந்தம் எங்கள், மா-செல்வம். (14)

வரத்தோர்க் கென்சொல் வறியதென்றிரங்கல்.

ஆசினி மைத்தமி ழொத்தவிவ் வாழ்வென்
றறிந்தகற்றி
ஆசினி மைத்தவம் பூண்டதன் றேமன
மாம்பிரநல்
ஆசினி மைத்தண் டலைத்திரு நாகையர்
காயதென்சொல்
ஆசினி மைத்தடங் கண்ணியர்க் காட்பட்ற்
கையமின்றே.

என்பது-சடுதியிற் பிரகாசித்த மின்னினையொத் தது இவ்வுலகவாழ்வென்று அறிவாலறிந்து குற்றங் களைநீக்கி இனிமையாகிய தவத்தினைப் பூண்டது மன

மல்லவோ ஆதலால் மாமர நல்ல பலாமரங்களின் மேகந் தவழுந் தோப்பினது செல்வத்தையுடைய நாகூரி னுயகருக்கென்சொல் அற்பமாயது ஆகையால் இப்போது மையணியும் பெரிய கண்ணிணையுடைய மாதர்களுக்கு அடிமையாவதற்குச் சந்தேகமில்லை யென்றவாறு.—ஆசகற்றி யெனக்கூட்டுக ஆசு-சடுதி, இன்-சாரியை, இமைத்த-பிரகாசித்த, ஆசு-குற்றம், இனிமை-இன்பம், ஆசினி-பலா, மை-மேகம், ஆசு-அற்பம், இனி-இப்போது, மை-அஞ்சனம். (15)

ஓகையி னடங்கி யோரூர் விடுத்திந்
நாகையி லுதய நயந்தன ரென்றது.

ஐயம் படுங்கசங் குன்மம் பன்மூல
மகற்றிமெய்யில்
ஐயம் படுங்கசம் போல்வலி யீந்தப்
பதிமுழுதும்
ஐயம் படுங்கசம் போம்படி செய்தங்
கமைந்துபுலன்
ஐயம் படுங்கசங் காட்டினர் நாகையி
லற்புதமே.

என்பது-கபமுண்டாகுங் காசமுங் குன்மமும் பலமூலமுமாகிய வியாதிகளை நீக்கியுடலங்களி லழகு தொடு மியானைபோலவலியு மீந்து அந்த ஊர் முழுதும் சந்தேக மொழியும்படியுங் கயமையொழியும் படியுஞ் செய்து அவ்விடத்திற் சமாதி யமைந்து பின்னர் பறிந்து போன புலனாகிய ஐந்தம்பு மொன்றோ டொன்று அடுக்கப் பிறப்பினை நாகூரிற் காட்டினர் அதுவே புதுமை யென்றவாறு.—இறந்து பின்னர் நாகூரில் வந்திருந்தா ரென்றுணர்க, ஐயம்-கபம், படும்-உண்டாகும், கசம்-காசம், ஐ-அழகு, அம்-சாரி யை, படும்-தொடும், கசம்-யானை, ஐயம்-சந்தேகம், படும்-ஒழியும், கசம்-கயமை, ஐ-ஐந்து, அம்பு-கணை, அடுங்க-அடுக்க, சம்- பிறப்பு. (16)

பாதுக மின்னும் பயனுள வென்றது.

அற்புத னன்றிட்ட கொட்டையில் பாதுக
மம்புயத்தாள்
அற்புத நன்றிட்ட மாகத்தொட் டீரரி
தேர்கரியாள்
அற்புத னன்றிட்ட நாகையு மெண்மை
யவரிடத்தும்

அற்புத னன்றிட்ட வுள்ளத்து மென்று
மலர்ந்தனவே.

என்பது-தச்சன் அன்று கொணர்ந்திட்ட கொட்டையில்லாத பாதுகத்தைத் தாமரைமலர் போன்ற பாதத்தாற்றோற்றும் புதுமை பெரிதாக இஷ்டமுடனேதொட்டு நடந்தீர் அப்பாதுகம் ரதகஜ துரக பதாதிகள் ஓரற்புதமாகிய எண்ணத்தினை யுடையானிடத்தும், நன்மையால் அவன் கொடுத்த நாகூரிடத்தும் எளிமையுடையவ ரிடத்தும், அன்பாகிய தனத்தையுடையவனது திட்டையாகிய மனத்தினுமெக்காலும் விளங்காநின்றன வென்றவாறு.—அற்புதம்-ஆயிரங்கோடி, அற்புதன்-தச்சன், அன்று-அப்போது, இட்ட-வைத்த, அற்புதம்-அதிசயம், நன்று-பெருமை, இட்டம்-விருப்பம், அற்புதன்-ஒரெண்ணுடையன், நன்று-நன்மை, இட்ட-கொடுத்த, அற்பு-அன்பு, தனன்-தனத்தை யுடையவன், திட்ட-திட்டையாகிய. (17)

சீதல ராயத்துட் சிறந்தன வென்றது.

அலர்வன மாமை யுருவினர் சீர்த்தி
யணிகவியின்

அலர்வன மாலை புனைதலி னூற்பல
வாய்த்தின்வாய்
அலர்வன மாய விரத்தலெவ் வாறினி
யம்புயமொய்
அலர்வன மாநிழ னாகையர் கோன்செய்த
வாக்கமிதே.

என்பது-அழகு விரிவனவாகிய உருவத்தை யுடையவரது, கீர்த்தியை அலங்காரப் பாவினமாகிய மலர்களால் அழகிய மாலை புனைந்ததனால் பல ஆய மாகிய கூட்டத்தார் வாயிடத்தில் என்னைப் பழிச்சுத் தூற்றல் காடாகத் தழைத்துப்படர்ந்தன, இதனால் அவரிடத்தில் இனிமேல் இரந்து கேட்டால் எந்த முறைமையாம், தாமரைமலர்கள் மொய்த்த தடாக மும் பொழில்களின் பெருமையுமுள்ள நிழலும் உடைய நாகூரவர்க்கு அரசராகிய நாயகர் என்பால் செய்த பலனிதுவே யென்றவாறு.—இதுவென்னு மெழுவாய் இரந்துகேளாமல் இருத்தலென்று எதிர் மறுத்தசொல் லெச்சத்தைச் சுட்டிநின்றது பலன்-பயனிலை, அவரது காரணங்கொண்ட புராணஞ் செய் தமையால் சொந்த அடிமையிவ னென்று யாவரும் வழங்கலானும், அடிமையைக் காத்தல் ஆள்பவருக்

குக் கடனாதலானும், இரந்து கேட்கினும் கேளா திருக்கினும் காத்தல் உரித்தாதலானும் மாலைபுனைந்த தனால் வாயலர் வனமாயவென்றும் இரத்தல் இனி எவ்வாறென்றுங் கூறினாரென்றுணர். அலர்வன-விரிவன, மாமை-அழகு, அலர்-மலர், வனம்-அழகு, அலர்-பழிச்சொல், வனம்-காடு, அலர்-நீர், வனம்-பொழில், மா-பெருமை. (18)

என்குறை யுணரா திருந்திரே லதுநும்
நன்குறை பெருமயி னயமெனக் குறித்தது.

ஆக்கத் தரும்பிகல் பார்ப்பினி கொங்கை
யழித்துப்பின்னர்
ஆக்கத் தரும்பெருஞ் செல்வம்பெற்றீர்முறை
யாற்றுமென்சொல்
ஆக்கத் தரும்பயன் காணலே யேலது
நும்பெருமை
ஆக்கத் தரும்பிய சீர்நாகை வாழரிச்
சந்தனமே.

என்பது-உயர்தலுடைய தாமரை யரும்புடனே இகலாநின்ற பார்ப்பினியினது முலைகளை யழித்துப் பின்னருண்டாக்கத் தாராநின்ற பெரிய செல்வத்தைப் பெற்றவரே முறையிடு மென்னுடைய

சொல்லின் ஊதியமுடைய அரிய பயன்களைக் காணு மல் இருப்பீராகில் அது தங்களுடைய பெருமை யாகும் செல்வத்தாற் படர்ந்த சிறப்புடைய நாகூரில் வாழுங் கற்பகமே யென்றவாறு.—அவ்வூதியம் முறையிடுவோனுக் கெனக்கொள்க. ஆக்கம்-உயர் தல், அத்து-சாரியை, அரும்பு-முகை, ஆக்க-உண் டாக்க, தரும்-தராநின்ற, ஆக்கம்-இலாபம், அரும்-அரிய, ஆக்கம்-செல்வம், அரும்பிய-படர்ந்த. (19)

துன்ப வினையிற் சுழல்வனே வென்றது.

சந்தனம் போனடை யாரிட மேவிட்டுத்
        தையல்வருஞ்
சந்தனம் போடக் கண்டார் கொடியன்ன
        தயங்குவனே
சந்தனம் போதகில் குங்குமஞ் சண்பகந்
        தாந்தவழ்வ
சந்தனம் போர்த்த மணிமாட நாகைதற்
        காவலரே.

என்பது - தூதினை யன்னத்தைப்போல நடை யுடைய மடவாரிடத்தில் அனுப்பிவிட்டு அந்தத் தூது வருகிற வழியில் சோற்றினைத் தூவக்கண்ட

காக்கை முடுகியு முடுகாதுநின்று திகைத்தல்போல
யானுந் திகைத்திடுதலோ தங்களைச் சேர்ந்தவர்க்கு
முறையன்று சந்தனமும் பூவகிலும் குங்குமமும்
சண்பகமும் ஆகிய மரங்களிற் றவழாநின்ற தென்
றற்காற்றும் அழகும் பொதிந்த மணிகளாலாகிய
மாளிகையுடைய நாகூர்தன்னைக் காப்பவரே யென்ற
வாறு.—அந்த வழியினின்று நான் திகைத்திடுதலோ
வெனக் கொள்க, காமக்குற்ற நீக்கல் கருத்து.—
சந்து-தூது, அனம்-அன்னம், சந்து-இடைவழி,
அனம்-சோறு, சந்தனம்-மரம், வசந்தன்-தென்றல்,
அம்-அழகு. (20)

இன்பநுகர் காட்சி யிதய நயந்தது.

தற்கா வலரரி நாகையர் கோன்மறை தந்திடுமோ
தற்கா வலரசி னுக்கா திறத்தகைக் காவரமீ
தற்கா வலரகலக் காட்சியாக்கொளெனத் தன்மையகா
தற்கா வலரணி நண்டே னுகரளி தாமெனவே.

என்பது-தற்கத்தி னுவலுடையாருக்கு ஒரு சிங்க
மாகிய நாகூரினாயகர் வேதத்தாற்றரு மோதலுக்காக
வும் வல்ல இராசாங்கத்துக்காகவுந் திறத்த தகுதிக்
காகவும் வரங்களைத் தருகிறதற்காகவும் பழிப்புத்

தீரக் காட்சியாகவும் கொண்ட காதல் எத்தன்மைய வெனில் நந்தாவனத்தின் மலர்களின் மொய்த்த நுண்ணிய மதுவினை நுகரும் வண்டுகள் தம் விருப்பம்போ லெனலா மென்றவாறு.—தற்கம்-பகை, ஆவலர் - விருப்பமுள்ளவர், ஓதற்கா-ஓதலுக்காக, வல-வல்ல, அரசு-இராஜாங்கம், ஈதற்கா-ஈதலுக்காகவும், அலர்-பழிச்சொல், காதல்-ஆசை, கா-நந்தாவனம், அலர்-மலர், அணி-மொய்த்தல். ((21

வண்டு தூதாக வருந்திக் கேட்டது.

தாமதி யாக முடையார்தென் னுகையர்
தம்மிடம்போய்
தாமதி யாகரு ணைப்பெற வெந்துயர்
சாற்றிப்பொற்றேள்
தாமதி யாகமின் னேவாங்கி வம்மின்கள்
சார்பிரபந்
தாமதி யாகப் பிணிநீங் கெனச்சஞ்
சரீகங்களே.

என்பது-வலியினை மதிக்கும் உடலினையுடையார் தென்னுகைநாயகர் தம்மிடத்திற்போய்த் தாமதித் திராமல் அவர் கிருபை நாம் பெற்றுக்கொள்ள எமது

துயரத்தினைச் சொல்லி அழகிய தோளின் மாலை யினைத் தியாகமாக விப்பொழுதே வாங்கி வாருங்கள் அவரைச் சார்ந்த பிரபந்தனே மதியுண்டாகப் பிணி நீங்கிக்கொள்கவென்று வண்டினங்களே யென்ற வாறு.—பிணிநீங்கி மதியுண்டாகவென்று சொல்லி வருவீர் வண்டினங்களே யெனக்கொள்க. தா-வலி, மதி-மதித்தல், ஆகம்-உடல், தாமதியா-தாமதித் திராமல், கருணை-கிருபை, தாமம்-மாலை, தியாகம்-கொடை, பிரபந்தா-நூல் செய்பவனே, மதி-புத்தி, ஆக-உண்டாக. (22)

வண்பத மாட்சி வழங்கிற் றென்றது.

சரிகங் கணங்குல முன்கைமின் ணார்குடை
 தண்புனலாற்
சரிகங் கணங்குடை வால்வளை முத்துஞ்
 சரோருகமுஞ்
சரிகங் கணங்குளி ரிந்திற்கும் நாகையர்
 தாட்டிறமஞ்
சரிகங் கணங்குயர் வேல்வல னுக்கிறை
 தந்ததுவே.

என்பது-வளையலுங் கங்கணமு மணியு முன் கையினை யுடைய மின்னன்னார் குளிக்குங் குளிர்ந்த புனலாற் சரிந்த வரம்பினது பக்கத்தழகுடைய வெள்ளைச்சங்கின் முத்துகளும் வெண்டாமரையும் வானத்தின் தாரகைகளுக்குங் குளிர்ந்த சந்திரனுக்கு நிகரொக்கும் இத்தகை மருதத்தையுடைய நாகூரினாயகரது பாதத்தின்திறமையானது பூமாலையும் பருந்துங் கொலையுமுயர்த்த வேலேந்திய வலக்கரத்தரசன் ஒருவனுக்கு ஒழிந்துபோன விறைமாட்சியைத் தந்த தென்றவாறு.—சரி-கைவளை, கங்கணகம் - கடகம், சரி-சரிதல், கங்கு-வரம்பின்பக்கம், அணங்கு-அழகு, சரி-ஒப்பு, கம்-வானம், கணம்-தாராகணம், மஞ்சரி-பூமாலை, கங்கு-பருந்து, அணங்கு-கொலை. (23)

சொல்லின் கரியே தோற்றிற் றென்றது.

தந்தக் கரிய ரரியர்பொற் றேரினர் தம்படைக
தந்தக் கரிய ரமர்புரிந் தவர்தவ நாகையர்சொல்
தந்தக் கரிய ரவராத லான்மற்றுஞ் சட்சமையர்
தந்தக் கரிய ரடரிக லாலுட் டகர்ந்தனரே.

என்பது-கொம்பினது யானையையுடையவரும் குதிரையையுடையவரும் பொன்னாலாகிய தேரினை

யுடையவரும் தத்தம் சேனைகளை யுடையவரும் ஆகிய கோபந் தக்க பகையர் போர் செய்து ஆர்ந்த தவத்தினையுடைய நாகூரிணுயகரின் சொல்லானது கொடுத்த பொருளிற்குச் சாட்சியவரானதால் மற்றும் அறுவகைச் சமயத்தாரும் கல்வி நூலாகிய கண்ணையுடையவரும் இசை நூலுடையவரும் நெருங்குந் தற்காத்தாலுள்ளந் தகர்ந்திழகி யொழுகிணு ரென்றவாறு-தந்தம்-யானைக்கோடு, கரி-யானை, அரி-குதிரை, அர்-விகுதி, கதம்-கோபம், தக்கு-தக்க, அரியர்-பகைமையர், தந்த-கொடுத்த, கரி-சாட்சி, அர்-விகுதி, தந்து-கல்வி நூல், அக்கம்-கண், இயம்-இசைநூல், அர்-விகுதி. (24)

மல்லல் கரமே மகிமைய தென்றது.

தகரந் தகரந் தகரவி நாகையர் தண்கனிவைத்
தகரந் தகரந் தகர வயின்றதுஞ் சண்டகர்பா
தகரந் தகரந் தகரவ நீப்பதுஞ் சார்கலிர்சொல்
தகரந் தகரந் தகரமென் றுன்பத்தைத் தட்டுவதே.

என்பது-பூமியின்கண் அழகாகிய கிரணத்திற்குரிய இரவியாகிய நாகூரிணுயகர்க்குக் குளிர்ந்த

பழத்திற்கொலை நினைத்தவர் வைத்த மறைந்த நஞ்சு முறிய வெடுத்துண்டதுங் கொடியவர் பாதகர் குருடர் அறிவிலர் இவர்கள் குற்றத்தை நீக்குவதுஞ் சார்ந்த கலிறுநபிசுட்டிச் சொல்லிய பல மணப் பண்டமும் பூந்தாதும் கஸ்தூரியுங்கொண்ட கலவை யள்ளியகை யென்னுடைய துன்பத்தைத் தட்டுவது மென்றவாறு.—உண்டதும் நீப்பதும் தட்டுவதுங் கையெனக்கருவி கருத்தாவாகக் கொண்டது. அதன் காரணந்தோற்றற் றெனக்கொள்க, தகர்-பூமி, அந்தம்-அழகு, கரம்-கிரணம், தகவு-உரிமை, ரவி-சூரியன், வைத்த-இட்ட, கரந்த-மறைந்த, கரம்-நஞ்சு, தகர-முறிய, பாதகர்-கீழ்மக்கள், அந்தகர்-குருடர், அந்தகர்-அறிவிலர், அவம்-பயனில்லாமை, தகரம்-பலமணப்பண்டம், தகர்-பூந்தாது, அந்தம்-கஸ்தூரி, கரம்-கை. (25)

ஆக்கத் திருப்பதத் தாண்டகை யென்னின்
தீக்குடை குணமெலாம் போக்குதி றென்றது.

தட்டுக் கடைவடி வேலினர் நீதியர்
தாபதர்பொன்

தட்டுக் கடைவுப காரிகள் தாழ்பதந்
  தந்தெனின்சி
தட்டுக் கடைகுணம் போக்குக மேதித்
  தடங்கஞ்சங்கு
தட்டுக் கடைவழி தேன்சிந்து நாகைத்தங்
  குந்துரையே.

என்பது-பரிசையும் கடையும் வடிவேலுமுடைய வரும் நீதி யுடையவரும் தவத்தினை யுடையவரும் பொன்னில்லாமல் நிருபாகந் தாழ்வுபடுங்காலத்தில் அதனைக் கொடுத்து அடைக்கு முதவியாளரும் தாழா நின்ற உங்கள் பாதந் தந்து என தறியாமையாகிய இழிகுணங்களைப் போக்குவிப்பீராக, மேதிகள் தடாகத்தினது தாமரை மலர்களைக் குதட்டுங் கடைவாய் தோறுந் தேன்களைச் சிந்தும் நாகூரிடத்திற் றங்கா நிற்குந் துரையே யென்றவாறு.—தட்டு-பரிசை, கடை-கடை தல், தட்டு-குறைவு, அடை-அடைத்தல், சிதடு-அறியாமை, கடை-இழிவு, குதட்டு-குதட்டு தல், கடை-வாய்க்கடை. (26)

செல்வர் வேந்தர் சீர்பல தாங்கிப்
பல்கா லுயர்நெறி பார்த்திவ வென்றது.

தங்கத் தனத்துடை மன்னவ ராக்கந்
 தணியநுந்நீ
தங்கத் தனத்தனென் றேத்த வளர்ந்தது
 தையலர்மா
தங்கத் தனத்தை யரும்பம் புயமெனத்
 தண்டுகிர்பா
தங்கத் தனத்தடஞ் சூழ்திரு நாகைத்
 தராதிபரே.

என்பது-தங்கமாகிய திரவியத்தையுடைய மன்னவரது பெருந்தகையெல்லாந் தாழ்ச்சி செய்ய உங்கணீதங் கருத்தனென்றும் அத்தனென்றும் ஏத்தத் தக்கதாய் வளர்ந்தது குளிக்குமடவாரினது யானையாகிய முலைகளைத் தாமரையின் அரும்புகளென்று குளிர்ந்த பவளக்காலின் அன்னங்கள் ஒளிக்குந் தடாகஞ் சூழ்ந்த செல்வத்தைபுடைய நாகூரினையாளும் அதிபரே யென்றவாறு.—தங்கம் - செம்பொன், தனம்-திரவியம், நீதம்-நீதி, கத்தன்-கருத்தன், அத்தன்-ஐயன், மாதங்கம்-யானை, தனம்-முலை, பாதம்-கால், கத்து-சத்தித்தல், அனம்-அன்னம். (27)

சிற்றின வினையது செறியழ லகற்றிநம்
பொற்பதப் பந்தர் பூநிழற் றருகென்றது.

தராதரங் கண்டறி யாரிடஞ் சார்வதுஞ்
சார்ந்தவர்க்கே
தராதரங் கண்டவர் தம்முற வோட்டிநுந்
தாண்மலர்ப்பந்
தராதரந் தந்தெனை ரட்சிக்க வேண்டுமற்
றண்புயப்பூ
தராதரங் கத்தின்முத் தார்வாவி நாகைத்
தலத்தரசே.

என்பது-மக்களது தராதரத்தைக் கண்டறியாதவரிடத்திற் சார்வதையும் சார்ந்தவர்களுக்கு இயாதேனுந் தராத தகுதியைக் கருத்தில் அமைத்தவர் தங்களுடைய வுறவையும் ஒதுக்கி உங்கள் பாதமாகிய பூம்பந்தலின் ஆதரவு தந்து என்னைப் புரக்க வேண்டும் மற்றொழிலு மாலையினது குளிர்ச்சியுமுடைய மலையாகிய புயத்தை யுடையவரே அலையிடத்தின் முத்தார்ந்த தடாகத்தையுடைய நாகூரிடத்தரசரே யென்றவாறு.—தராதரம்-அவரவர் தகுதி, கண்டு-பார்த்து, தரா-கொடாத, தரம்-தன்மை, கண்டவர்-உணர்ந்தவர், பந்தர்-பந்தல், ஆதரம்-ஆதாரம், பூதரா-மலையே, தரங்கம்-அலை. (28)

புதுமையிற் புதுமை புணர்பிணிக் கொம்பருந்
துதிதரல் பாதத் தொடரியல் பென்றது.

தலக்கொப் பரும்புங் கனிகுற்றி தந்ததுஞ்
சார்ந்தவன்பாத்
தலக்கொப் பரும்புதை தன்னிற் புதுமை
சலநிதிசூழ்
தலக்கொப் பரும்புமின் சுட்டியி ளைகைத்
தயாளஎன்னே
தலக்கொப் பரும்புகழ் தாங்கலநும் பாதத்
தகுதியதே.

என்பது-இலைக்கொப்பும் அரும்பும் கனியும் பலா மரக்குற்றியானது தந்ததும் வந்தவன் பார்த்தலக்கும் ஒப்பரிய புதுமையாம் அப்புதுமையிற் புதுமை யாவது கடலாடை யுடுத்த பூமியாகிய கொப்பிலங்கு மாதினெற்றிச் சுட்டிபோன்ற நாகூர்வாழுந் தயாளரே என்னுடைய நோயினுக்குக் கொழுகொம்பாகிய உடலுஞ் செழித்துப் புகழினைத் தாங்கிக்கொள்ளுதல் அது தங்கள் பாதத்தகுதியே யென்றவாறு.—புதுமை-எழுவாய், தாங்கிக்கொள்ளுதல்-பயனிலை, தலம்-இலை, கொப்பு-மரக்கொம்பு, அரும்பு-முகை, பார்தத

லக்கு - கண்ட குறிப்பு, ஒப்பு - பொருவு, அரும்- அருமை, புதை-புதுமை, தலம்-பூமி, கொப்பு-மாதர் காதணி, அரும்பும்-இலங்கும், நோதல்-நோய், கொம்பர்-கொழுகொம்பு, அ-சாரியை. (29)

பொய்யொழுக் ககற்றிப் பொங்கறி வௌவையு
மெய்பெற வருள்வதும் மேம்புக ழென்றது.

தகுதிப் பதுங்க விழிவோங்க மேன்மை
தயங்கவெண்ணேந்
தகுதிப் பதுங்கம் படிற்றொழுக் கார்தொடர்
சார்புவிட்டே
தகுதிப் பதுங்கதி நாகைமன் ஞகல்விச்
சாகரம
தகுதிப் பதுங்கனங் கொள்வதும் நம்புகழ்
சாதிப்பதே.

என்பது-உரிமை யொளிக்கவும் இழிவு வளரவும் மேன்மை யலையவும் கவலை கொள்ளவும் பெருமை புறம்படவும் பொய்யொழுக்க முடையாரை உறவு கொள்ளுஞ் சார்பினை ஒழித்து நல்லொழுக்கம் பெறுவதுங் கல்வியாகிய கடலினது மதகுண்டாவதுங் கனதி கொள்வதும் சுவர்க்கமாகிய நாகூரை யாளு

நாயகரே உங்கள் புகழைச்சாதித்து நிற்பதே யென்ற வாறு.—தகுதி-உரிமை, பதுங்க-ஒளிக்க, ஏந்த-கொள்ள, குதிப்ப-புறம்பட, துங்கம்-பெருமை, தகுதிப்பது-நல்லொழுக்கம் பெறுவது, மதகு-நீரோடி, உதிப்பது-உண்டாவது. (30)

பல்லெலக் கழுத்தம் பயில்வர்நண் பகற்றி
நல்லொக்கல மேலோர் நட்பருள் கென்றது.

சாதிப் படித்தண் டலைத்திரு நாகைத்
தலைவ தந்தஞ்
சாதிப் படித்தகை கொண்டகங் கொண்டசண்
டாளர்நட்பைச்
சாதிப் படித்தகை தட்டின்றி யுள்ளுணர்
தன்னொடுபே
சாதிப் படித்தலத் தூற்ருரி னேடருள்
சங்கதமே.

என்பது - மலர்களது தேனிற் குளித்தலுடைய பூந்தோட்டஞ் சூழ்ந்த திருநாகையாளுந் தலைவரே தங்கள் தங்கள் சாதிவழக்கப் பெருமைகொண்டு அகங்காரங்கொண்ட சண்டாளர் உறவை யழித்துத் துறைகளி னியற்கைகள் தடைபடாது உள்ளத்

துணர்விஞேடு வீண்பேச்சுப் பேசாது மவுனித்து இவ்வுலகத்தாரோடொத்திராநின்ற பெரியோரினது நட்பிணை யருள்வீராக வென்றவாறு.—படித்த கை தட்டின்றி யுள்ளுணர்வு தன்ஞேடுபேசாது, மவுனித் தலாவது கிரிகையும் கருமமும் கருத்தாவுமாகிய உடல்நின்ற துறையும் அவ்வுடற்கு முதலாகிய பல கரணங்க ளின்றதுறையும் அதற்குள் நிறைந்து மறைந்த உணர்வுயிர்களின்ற துறையும் இவ்வுயிர்க் குயிராகிய மறைகுறி யொனிவுநின்ற துறையும் அக் குறி குறிகொள்ளு மறிவினது தோற்றமும் அவ் வறிவு இத்துறைகள்அனைத்திற்கும் அமையும்பேத மருளியும் அப்பேதங்கள் அனைத்தினையும் அவற் றவற்றிற்கே உரித்தாகியும். தன் பண்பாக்கியும் அப் பண்பிணைச் சகலத்திற் ரேற்றிவித்தும் அசைந்து மசையாதுமாகிய காரணப் பொருளும் அதன் அறி வும், அதன் உதிப்பும், அதன் வலுமையும் அத ஞேக்கமும், அதன் கேள்வியும் அதன் வாக்கும், பர வாதுபரவி இல்லாமலுள்ளதாய், ஏகமாய்ப் பலவாய் நிற்றற்கமைந்த தற்கிழமைப் பொருளாய துறையும் பிறிதின் கிழமைப்பொருளாய துறையும், இன்ன தென்றறிந்து கீழ்நின்று மேலேறியும் மேனின்று

கீழிருந்துஞ் சோதித்து நீக்குவனநீக்கி யெடுப்பன வெடுத்து அவ்வுணர்விஞேடும் யாதொன்றனையுங் காணுதுநிற்ற லென்றுகொள்க.—சாதி-நறவு, படிதல்-குளித்தல், சாதி-குலம், படி-வழக்கம், தகை-பெருமை, சாதி-யொழித்து, படி-துறை, தகை-இயற்கை, பேசாது-வாய்வாளாது, இ-சுட்டு, படி-பூமி. (31)

அகிறிணைச் சாதியோ டுறைதர வல்லரென்
பகுமொழி யுணராப் பான்மையென் னென்றது.

சங்கந் தரமணி முன்றிலி ஞகையர் தாருவண்ட
சங்கந் தரமணிப் புள்ளொடும் பேசுவர் சஞ்சலபா
சங்கந் தரமணி யாவடி யேனிதஞ் சாற்றுங்கல்விச்
சங்கந் தரமணி சொல்லுண ராததெத் தந்திரமே.

என்பது-மனைகளின் முற்றங்கடோறும் கடலிடத்து வலம்புரிச்சங்குகளூர்ந்துவந்து முத்துகளைக்கொடுக்க நாகூரையாள்பவர் தருவோடும் பாம்போடு மேகத்தோடு மழகிய புட்களோடும் பேசவல்லவர் ஆகுலமென்னும் கயிறு கழுத்தின் மணிவடமாதலையுடைய அடியேனிதங் குறையிரக்கும் கல்விச்சபை யதன் சமாதானத்தை யணிந்துகொள்ளும்

சொல்லினது பயனையுணராதமுறை எது தந்திர முறையோ வென்றவாறு.—தரவென்னும் வினையெச்சம் நாகையரென்னுங் குறிப்பு வினையைக் கொண்டது, இரக்கு மென்னு மெச்சம் சொல்லென்னும் பெயரைக்கொண்டது. சங்கம்-வலம்புரி. தர-கொடுக்க, மணி-முத்து, அண்டசம்-பாம்பு, கந்தரம்-மேகம், மணி-அழகு, பாசம்-கயிறு, கந்தரம்-கழுத்து, மணி-பொதுமணி, சங்கம்—சபை, தரம்-சமானம், அணி-அணிதல். (32)

இரக்கு மெளியனை யின்னமு தருளிப்
புரத்தலே கருமப் பொருளிலொன் றென்றது.

தந்திர வாளணி தஞ்சையர் கோன்றரு நாகைநகர்
தந்திர வாளலர் தீபம்வைத் தார்சது வேதவியல்
தந்திர வாளப் பகலாள வோதுந்தண் வாயமுதந்
தந்திர வாளனை யுய்வித்த லேதரு மத்தகையே.

என்பது-சேனைகளேத்தும் வாளணியுந் தஞ்சை நகரார் வேந்தன் கொடுக்கும் நாகூரில் தங்கள் நிலையாகிய வொளிவுபூக்கும் விளக்கினை நிறுத்திவைத்தவர் நான்குவேதத் தியற்கை நூல்களை இரவிலும் பகலிலும் ஆளுமுறையால் ஓதும் அவரது குளிர்ந்த

வாயமுதங்கொடுத்து இரந்துநிற்பவனைஉய்யக்கொள்ளுதலே தருமத்திற்கு அழகென்றவாறு.—எனவே, அவரது தருமத்தை கையுய்வித்தலே யென வெழுவாயும், பயனிலையுமாகத் தேற்றங்கொண்டு முடிக்க. தந்திரம்-சேனை, வாள்-ஆயுதம், தம்-தங்கள், திரம்-நிலை, வாள்-ஒளிவு, தந்து-கல்விநூல், இரவு-இராக்காலம், தந்து-கொடுத்து, இரவாளன்-இரப்பவன். ()

எங்கும் படர்ந்த வியல்சீ ருண்டென்
பங்கம் பழிப்பாற் பயமுமின் றென்றது.

மத்தகத் தாழி படுதயி ரொத்த மதிபுன்வினை
மத்தகத் தாசை யுழன்றத னல்மலி நாகையர்சீர்
மத்தகத் தானை யரசர் முடியினு மாமறைநே
மத்தகத் தாதிபர் சிந்தையிடத்து மலர்ந்தனவே.

என்பது-எனது புத்தியானது தீவினை விளையுங் கெடுநிலத்தினை யாசையுற்று உழன்றதனால் மத்தினால் கடையப்படுந் தாழியகத்துத் தயிர்போற் றகர்ந்தது ஆயினும் அச்சமில்லை நாகூரிணயகரது மலிவாகிய புகழானவை பட்டங்கட்டியநெற்றியுடைய யானை

மேல்வரும் அரசர் முடியிடத்தினும், மாமறைநேம த்தினுள்ளத்துத் தவத்தாதியர் சிந்தையிடத்தினும், பயனோடு விரிந்திருந்தன ஆதலாலென்றவாறு.—இப் புகழானது இறைமாட்சியுந் தவத்துறையும் எளிதி னல்குமாயின் புகழ்ந்தவரது தீவினைப்பகுதி நீக்கி வித்த லரியதன்றென்றுகொள்க. மத்து-கடைமத்து, அகம்-உருபு, தாழி-குடம், மத்தகம்-கெடுநிலம், பரத் தையர், ஆசை-இச்சை, மத்தகம்-நெற்றி, நேமம்-முறைமை, அத்து-சாரியை, அகம்-உள்ளம். (34)

அவயவத் தியல்பி னுக்கங் கூறி
யுவகை பூண்பா னுள்ளந்தேற் றியது.

மலரளித் தாரி னறுங்குஞ்சி யார்புவி
மன்பதைபால்
மலரளித் தாஅங்கரு ணைக்கண்ணி னார்மைய
லற்றநிரு
மலரளித் தானுந் திருநாகை யார்மலி
சீர்பதக்க
மலரளித் தானம் வரமே சொரியும்வண்
மைக்கையரே.

என்பது-இரட்சித்தாளுந் திருநாகூரி ஞயகரான வர் வண்டுமொய்க்கும் பூமாலையின் புதுமணங் கமழும் சிரத்திற் கேசமுடியினர், உலகத்தின் மக்களிடத்தில் விரிந்த அன்பினுல் தாவுங் கருணைக் கண்ணினர் ஒரு பொருளின்மேலும் வாஞ்சையில்லாது மலமூன்று மொழித்தவர், மலிந்த புகழினையுடையபாதம் தாமரை மலர்போன்றவர், வரங்களை யள்ளித் தானமாகச் சொரியும் வண்மையுங் கையினை யுடையவர், ஆதலால் கவலையுற்று அஞ்சற்க மனமே யென்றவாறு.— மலர்-பூ, அளி-வண்டு, தார் - மாலை, மலர் - விரிதல், அளி-அன்பு, தா அம்-பாய்ந்துகொள்ளல், நிருமலர்-மலமிலர், அளித்து-இரட்சித்து, ஆளும்-கையாடும், கமலர்-தாமரை யுடையவர், அளி-அள்ளி, தானம்-பிச்சை. (35)

செறிபகை தருக்கஞ் சிறந்தோ ருளத்தையு
முறைதவத் தடைவே முடிப்பரென் றுரைத்தது.

மைக்கை தவத்தடை யாரையும் வேதம்
வழீஇபொறிதி
மைக்கை தவத்தடை சொல்லையும் நாளு
மனமதிரன்

மைக்கை தவத்தடை யாள ருளமுமன்
னுகையிற்பன்
மைக்கை தவத்தடை வேமுடிக் கும்மலி
னம்படவே.

என்பது-மன்னராகிய நாயகர் நாகையி னிருந்தே இருளாகிய பொய்யினையுடைய பகையரையும், வேத நெறிவழுவிஐம்பொறிகளினது தீமையாலும்வஞ்சனை யாலுந் திரண்ட அவரினது சொல்லையும், நாளு மனத் தான் மதிக்கு நன்மையாகிய கைகளின் மிகுந்த அடையாளத்தை யுடையா ருள்ளத்தையும், நான்கு வழியின் ஒழுக்கத்துத் தவத்தின்வழியாகவே முடிப் பர் மாசற வென்றவாறு.—முடிக்குமென்ற முற்று வினைக் கடைநிலத்தீபமாகிப் பலபொரு ளொருசொல் லாக நின்றது, பகையரை யழித்தலும், அவர் சொ ல்லை முடிவுபடுத்தலும், உள்ளத்தை முற்றச்செய் தலு மெனக்கொள்க. மை-இருள், கைதவம்-பொய், அடையார்-பகையர், தீமை-தீங்கு, கைதவம்-வஞ்சனை, அடை-திரட்சி, நன்மை-நலவு, கை-கைகள், தவ-மிகுதி, அடையாளம்-இலக்கணம், பன்மை-பலவழி, கை-ஒழுக்கம், தவம்-தவசு, அடைவு-வழி. (36)

பற்பல பிணிக்கும் பலன்பெறு நாகை
அற்புதர் வாயுரை யணிமருந் தென்றது.

மலினத் திருகரம் வெண்மேனி செவ்விதழ்
மஞ்சள்முகம்
மலினத் திருகண்ட மாலைசித் ராங்கம்
வரட்சியிரு
மலினத் திருகச மற்றுள நோய்க்கு
மருந்துநற்செம்
மலினத் திருகதி நாகையர் வாய்மலர்
மந்திரமே.

என்பது-கருநிறத்தைக் கொள்ளு மிரண்டு கையும் வெண்ணிறத்தைக் கொள்ளு மேனியு மஞ்சணிறத்தைக் கொள்ளுஞ் செவ்விதழு முகமுமுடைய கருங்குட்டம், வெண்குட்டம், காமாலை குற்றத்துடனே யிராநின்ற கண்டமாலை பெருவியாதி பித்தரோகம் இருமல் இதன் கூட்டத்தில் துக்கமுள்ள கசரோக முதலாக மற்றுள்ள நோய்களுக்கு மருந்தாவது நன்மையிற் பெருமையுடைய அச்செல்வகதிபோன்ற நாகூரி னுயகரது வாயின் மலர்ச்சியானெழு மந்திரமே யென்றவாறு.—மலினம் - கருமை, இரு - இரண்டு,

அத்து-சாரியை, மலினம்-குற்றம், இரு-இருத்தல், இருமல்-சயம், இனம்-கூட்டம், இரு-துக்கம், செம்மல்-பெருமை, இன்-சாரியை, அ-சுட்டு, திரு-செல்வம், கதி-சுவர்க்கம். (37)

பருவர லுற்றுப் பாங்கியொடு தலைவர்
தெரிகில ரென்னெனச் சேயிழை வினயது.

மந்திரங் கானிறை நாகையின் வாழ்வுடை
வள்ளல்பலர்
மந்திரங் கானினை வுள்ளங்கொள் ளார்மம்ம
ராலணிவா
மந்திரங் காநிறை நாணழியா வில்லின்
மாட்சிமைசு
மந்திரங் காநிற்பத் தாமதி யாரென்
மடக்கொடியே.

என்பது-தறுகா வென்னுந் தேவாலயம் பல மணங்களை யிறைக்கும் நாகூரின் வாழ்வுடைய வள்ளலானவர் பலபேர் சொல்லும் யோசனைகளை யறிவு கால்வளரு முள்ளத்தி னெடுத்துக் கொள்ளாதவர் எனதாசை மயக்கத்தாற் புனைநலங் குறையவும் நிறையும் நாணுமழியவும் இல்லகத் திருத்தலென்னு மாட்சிமை

சுமந்து நானிரங்கா நிற்பத் தாமதித்திரார் அவர் தாமதித்திருத்த லேது காரணமோ தோழியே யென்றவாறு.—மந்திரம்-தேவாலயம், கான்-மணம், இறை-இறைத்தல், மந்திரம்-யோசனை, கால்-காலு தல், நினைவு-அறிவு, வாமம்-நலம், திரங்கா-குறைய, நிறை-கற்பு, சுமந்து-எடுத்து, இரங்கா நிற்ப-உள் ளங் கரைந்திருப்ப. (38)

ஓகை யறிவினோ டுள்ளுணர் வருளும்
நாகை யதிபதி நாமமே யென்றது.

மடக்க மடக்க வருமே சுகமுன்ன
வல்லுடலின்
மடக்க மடக்க வலைப்பிணி போம்பற்ற
மற்றுமறி
மடக்க மடக்க வரிற்குண மாமதி
மாறுடையார்
மடக்க மடக்க வலியாந் தென்னுகைமன்
னுமத்தையே.

என்பது-தென்னுகையின் மன்னரது திருநாமத் தையே மடக்கி மடக்கி யோதுகில் பல வின்பங் கிடைக்கும் அவ்வோதலோடு மனத்தி னினைக்கில்

வலிய வுடலின் முடக்குவாதமுங் கொடிய கவலை யுள்ள பிணிகளு மொழியும் அவ்விரண்டும் எப்போதும் பற்றுதலாகில் அறி மடமையும் ஆமைபோலடக்கமும் கவரற்ற குணமும் நல்ல புத்தி மாறுபட்ட கயவரது மடமையாகிய தலையை அடக்கத் தக்க வலியு முண்டாகு மென்றவாறு.—மடக்க-மீட்ட, மடக்க - மீட்ட, மடக்கம் - முடக்குவாதம், அடம்-கொடுமை, அறிமடம்-ஆநந்தம், கமடம்-ஆமை, கவர் - பிளப்பு, மடம் - மடமை, கம் - தலை, அடக்க-அடக்கிக்கொள்ள. (39)

பொருணய மெல்லாம் பொலியுமென் கோமான்
கருணையங் கண்ணினற் கணித்தவர்க் கென்றது.

மன்ன தனவம் பொருளிலை மேலு
மகிமையுளார்
மன்ன தனவண் ணிலையுமுண் டாமஞ்ஞை
நாரையின்மேல்
மன்ன தநவந் தருபொழி னைகையின்
மாதவர்கள்
மன்ன தனவம் பெறுங்கரு ணைக்கண்
மதித்தவர்க்கே

என்பது-இருபதியிலுங் கிடையாத வழகிய பொருள்களொன்றில்லை மேலும் மகிமை யுள்ளவர்களுக்குத் தலைமை செய்யும் ஆசனத்தின் வண்மையினிலையு முண்டாகும் மயிலினங்கள் நாரைகளின்மேல் வலிக்கு மோசையானது புதுமையைத் தராநின்ற பொழிலுடைய நாகூரின் மாதவர்கள் சூழும் பெரிய கடவுளாகிய நாயகர் தங்களுறவு பெற்றுக்கொள்ளுங் கிருபைக் கண்ணினுற் கணித்தவர்களுக் கென்றவாறு.—மன்னுதன - கிடையாதன, கிடையாதன - நிலைபெறுதன, அம்-அழகு, மன்-தலைமை, ஆதனம்-ஆசனம், வண்-வண்மை, மல்-வலித்தல், நாதம்-ஓசை, நவம்-புதுமை, மன்-பெருமை, நாதன்-கடவுள், நவம்-கேண்மை. (40)

முறையில ரியல்பை முறைமையென் றுணரா
திறைமொழி போற்றுக விதய மென்றது.

மதித்தக நீந்துவர் மெய்யுண ரார்புவி
மாலுறைதுன்
மதித்தக நீர்மை யுடையார் கயவர்
மடவியல்சம்

மதித்தக நீயுழ லன்மின் நன்னுகை
மகிபரின்சொன்
மதித்தக நீதியென் றேர்க மருண்டு
மயங்கலையே.

என்பது-தன்னை மதித்துப் பாவக் கடலிடத்தி னீந்துபவர் மெய்மை நிலையுணராதவர் புவியினுள்ள பொருள்களினது மயக்க முறையுந் துன்மதிக்குத் தக்க நீர்மையுடையவர் கயமையுடையவர் இவர்கள் மடமை யியல்பைச் சம்மதித்து மனமே நீ யுழலா திருக்கக் கடவாய் நன்மையுள்ள நாகூர்வாழு மகிப ரின் சொல்லை மதிபோன்ற நீதியென்று ஆராய்ந்து கொள்ளக் கடவாய் கொண்டாயாகில் இம்மருள் கொண்டு கலங்கமாட்டா யென்றவாறு.—மதித்து-தன்னை மதித்து, அகம்-பாவம், மதி-புத்தி, தகவு-உரிமை, நீர்மை-குணம், சம்மதித்து-மனமொப்பி, அகம்-மனம், மதி-சந்திரன், கதவு-உவமை. (41)

நாகையர் புகழெழி ளுடுக வஃதே
யோகையின் மரக்கல முடம்பே யென்றது.

மயங்க லக்கப்பல வாக்கமுண் டாக
மருட்படச

மயங்க லக்கப்பல னின்றிமெய் யேபவ
வாருதியில்
மயங்க லக்கப்பலத் தண்பொழி ஞகையர்
மாண்புகழின்
மயங்க லக்கப்பல ருங்கரை சேர்க்கு
மலேவ றவே.

எனபது-அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயம் ஆகிய இவ்வைந்து மயங்களு மொன்ருே டொன்று மருவ அதனுற் பல பல குணபாடுகளுண்டாக அதனு னெறிமுறை மயங்க அதனுற் கலக்கத்தின் பலனுகிய உள் அச்சத்தி னூச்சித மில்லாமல் என்னுடலமே பாவமாகிய கடலி னமுழ்ந்திக் கிடந்து மயங்கக்கடவதல்ல இலட்சம் பழவருக்கத்துக் குளிர்ந்த பொழிலுடைய நாகூரி ஞயகரது மாட்சிமையுள்ள புகழி னயத்தைப் படித்துக்கொள்வாய் அந்தப் புகழாகிய கப்பல் அருமையங் கரையின் மலேவுத லுருது சேர்க்குமென்றவாறு—உள்ளச்சத்தி னூச்சிதமாவது, அனைத்தையு மாணேயி னிறுத்தியாளுங் கடவுளாகிய பொருளொன்றுண்டென்று விசுவாசித் தஞ்சிய அறிவினது வலி

யென்றறிக.—மயம்-ஐந்துமயம், கலக்க-மருவ, பல-பல்பல, சமயம்-நெறிமுறை, கலக்கம்-அச்சம், பலன்-வலி, மயங்கல்-வியங்கோண்முற்று, லக்கம்-இலட்சம், பலம்-பழம், மயம்-நயம், கல்-கல்லென்னேவல், அ-சுட்டு, கப்பல்-பஃறி. (42)

உலகெலா நிலைக்கு மொருமுளை போன்று
நலனுறு நாம நாயக ரென்றது.

மலைவா ரணந்திசைப் பாலகர் வான
மதிகதிர்
மலைவா ரணந்தினை யெங்குஞ் சிறந்தன
வாரிசப்பொம்
மலைவா ரணந்திரி தண்புன ஞைகையர்
மாமதுர
மலைவா ர்ணந்திகழ் வாயர் குத்துபெனும்
வண்பட்டமே.

என்பது-திசைக்கிரிகள் திசையானைகள் திசைப்பாலகர் வானங்கள் மதிகதிர்கள் ஓதையுடைய கடல்கள் நிலங்கள் இவைகளையும் அன்றி மற்ற எப்

பொருள்களையும் வேறுபடாது நிலைப்படுத்திச் சிறந்திருந்தன தாமரைப் பொலிவுகளைச் சங்கினங்கள் திரிவுபடுத்துங் குளிர்ந்த தடாகத்தையுடைய நாகூரி ஞயகர் மகிமையுள்ள மதுரம்போன்ற வேதந் திகழும் வாயினர் அவரதுகுத்பு என்னும் வண்மை கொடுக்கும் பட்டத்துத் திருநாம மென்றவாறு.—மலை-கிரி, வாரணம்-யானை, அமலை-ஓசை, வாரணம்-கடல், பொம்மல்-பொலிவு, வாரணம்-சங்கு, மலைவு-உவமை, ஆரணம்-வேதம். (43)

மாதர் மயக்க மறுத்தே யொருமை
நீத வழியி னிறுத்துவ ரென்றது.

பட்டம் படாகம் புகழ்முடி யார்பொற்
பதியின்பசும்
பட்டம் படாகம் புனைந்தார் மரபினர்
பங்கயத்துப்
பட்டம் படாகம் புள்ளூர் திருநாகையர்
பாவையர்கண்
பட்டம் படாகம்பு காட்டுவ ரோர்மைப்
பயனெறிக்கே.

என்பது-வாட்படை படாத சிரத்திற் புகழுங் கிரீடமணிந்தவரும் சுவர்க்கத்துப் பசியபட்டி னழகிய துகில்புனைந்தவரும் ஆகிய அசுரர் வங்கிஷத்தில் வந்தவர் தாமரைத் தடாகத்திலுண்டாகி வலம்புரிச் சங்குகள் மலருள்ளே யூர்ந்து திரியும் செல்வ நாகூரினுபகரானவர் மாதர்களினது கண்ணம்பு பாய்ந்தடராதுகாத்து ஒருமைப் பயனுள்ளவழி செல்லுகைக்கு அறிவென்னும் ஊன்றுகோல் அருள்பவ ரென்றவாறு.—நாகைய ரெழுவாயும் மரபினர் அருள்பவ ரென்பன பயனிலையுமாகக் கொள்க. பட்டம்-வாள், படா-தொடாத, கம்-தலை, பட்டு-பட்டுநூல், அம்-அழகு, படாகம்-துகில், பட்டம்-குளம், படா-உண்டாகி, கம்பு-சங்கு, பட்டு-பாய்ந்து, அம்பு-கணை, அடா-அடராது, கம்பு-ஊன்றுகோல். (44)

மருவிழாப் புன்மை மாற்றிவிட் டுயர்த்துந்
திருவிழா நந்தஞ் சீர்பத மென்றது.

பயனெறித் தீர்த்தறி நீங்கினும் பாதகப்
பவ்வமது
பயனெறித் தீர்த்தகத் தாக்கினும் வாவிபன்
மேதிமடிப்

பயனெறித் தீர்த்த வயனுகை வாழும்
பதிநும்பதம்
பயனெறித் தீர்த்தமன் ருேகடத் தேறற்
பயப்பதுவே.

என்பது - தடாகத்தை யுழக்கும் எருமைகளின் மடியி லொழுகும் பாலானது வாய்க்கால் வழியோடி ஈரப்படுத்திய வயலுடைய நாகூரிஞபகரே பையலான வன் நீதியைவிட்டு அறிவை நீங்கினும் அதனுல் பாதகமென்னுங் கடலது நீரடர்ந் திழுத்துத் தன் னிடத் தாக்கிக்கொள்ளினும் தங்கள் பாதமாகிய பல னுஞ் செப்பமுமுடைய திருவிழா அல்லவோ அத னைக் கடத்திக் கரைசேர்க்குதலைப் பயன் படுத்துந் தெப்பமாவ தென்றவாறு.—திருவிழா - அப்பாத தெரிசனை, பயல்-பையல், நெறி-நீதி, தீர்த்து-விடு த்து, பயம்-நீர், எறித்து-எறிந்து, ஈர்த்து-இழுத்து, பயன்-பால், நெறித்து-வாய்க்கால்வழி யொழுகி, ஈர் த்த-ஈரப்படுத்திய, பயன்-பலன், நெறி-செப்பம், தீர்த்தம்-திருவிழா. (45)

அச்ச வுள்ளத் தருந்துயர் நோய்க்கும்
பச்சைப் பொற்கழல் பசுமருந் தென்றது.

பயப்பங் கயப்பல வுந்தியுளாடப்
பயிலுடலின்
பயப்பங் கயப்பல பாடுவனே பிழை
பல்பொறுக்கும்
பயப்பங் கயப்பட னற்கண நாகைப்
பதிநமது
பயப்பங் கயப்பத மேயென்ற னேக்குப்
பசுமருந்தே.

என்பது-அச்சமாகிய சேற்றினை யுடைய நீரில் வலிய சுழிகளின் உழலாநிற்ப அதனால் இபங்கு முடலினது நிறமாவது அவ்விடத்து நிற்குமோ நில்லாதோ வென்று ஐயமுண்டாக வாடுவனே பல பிழைகளைப் பொறுக்குங் கருணையின் அழகாகிய மேன்மையம்பலனுள்ள நல்ல கூட்டத்தையுடைய நாகூரினுயகரே தடாகத்திற்ரேற்றும் தாமரைமலர் போன்ற உங்கள் பாதங்களிரண்டுமே யென்னுடைய வியாதிக்குப் பசுமருந்தாவ தென்றவாறு.—பயம்-அச்சம், பங்கு-சேறு, அயம்-நீர், பலம்-வலி, பயப்பு-நிறம், அங்கு-அவ்விடத்து, அயப்பட-ஐயமுற, பயப்பு-கருணை, அம்-அழகு, கயவு-மேன்மை, பலன்-பேறு, பயம்-தடம், பங்கயம்-தாமரை. (46)

உயிரின மோம்பு மொள்ளிய கருணையால்
அயர்சுமை யிறக்கி யாளுக வென்றது.

பசுமைப் படலம ராவளிக் குந்தகை
பாசமணி
பசிமைப் படலம ராமரத் தெய்தச்செய்
பன்னறவாற்
பசுமைப் படலம ராம்பொழி ஞைகைப்
பதியயர்துன்
பசுமைப் படலம ராக்கடத் தேற்றுமிப்
பாவியையே.

என்பது - உயிர்களுக்குக் குற்றங்க ளொழிதல் பொலிவாகக் காத்துக் கொள்ளும் பெருமையால் கயிறுபூட்டிய பசுவின்காலை மேகக்கூட்டந் தவழும் மரத்தினிடத்தில் வரும்படி செய்த பூக்களாலுங் கனிகளாலு மொழுகுந் தேன்களாற் பச்சென்றிருத் தல் உண்டாதற்கு அமை யிடமாகிய பொழில் சூழு நாகூரையாளு மிறைவரே வருத்தமுடைய துன்பமா கியசுமைத் திரையிடுதல் பொருந்தாமல் உய்யக் கொள்வீராக இப்பாவியை யென்றவாறு.—பாச மணி மரமென்றுஞ்செய்பதியென்றும்வினைத்தொகை

யமைக்க. படல்-அறிவினைமறைக்குந் திரை, பசு-உயிர்கள், மை-குற்றம், படல்-கெடுதல், அமர்தல்-பொலிவு, பசு-பசுவின்காளை, மை-மேகம், படலம்-கூட்டம், அராம்-தவமும், பசுமை-பச்சென்றிருத்தல், படல்-உண்டாதல், அமராம்-அமையிடமாம், சுமை-சுமக்கும் பொருள், படல்-இடுதிரை, அமரா-பொருந்தாமல். (47)

மனக்க ணிகன் கவலை மாற்றுநம் பொற்றாள்
எனக்கினி தருளி யிரட்சி யென்றது.

பாவியப் பாகப் புனைந்தாலு நன்றும்
பரிசுணர்ந்து
பாவியப் பாகனென் றேகொள்ள வேண்டும்
படரளியன்
பாவியப் பாகரு ளின்பொழி னாகைய
பாதகவப்
பாவியப் பாக வலைச்சிந்து நந்தம்
பதமலரே.

என்பது-செய்யுள் அதிசயங் கொள்ளப் புனைதல் செய்தாலும் நன்றாக உங்க ளியல்புணர்ந்து பலபல கவலைகளைப் போக்கிவிக்கும் பாதமலரைப் பரவிய

அருகாள னென்றென்னை யெடுத்துக் கொள்ளக் கட வீராக வண்டினங்கள் அன்பாகப் படர்ந்து இசையா கிய சுவையைக்கொடுக்கும் இனிய பொழிலுடைய நாகூரி லுயகரே நான் பாதகத்தை விரும்பும் பஞ்சை யானவன் அய்யாவே யென்றவாறு.—பாவிய பாகன்- பாவியப் பாகனெனை, ஒற்றில்வழி யொற்றுமிக்கது பா-செய்யுள், வியப்பு-அதிசயம், ஆக-கொள்ள, பா விய-பரவிய, பாகன்-அருகாளன், அன்பா - அன் பாக, இயம்-இசை, பாகு-சுவை, அப்பாவி-பஞ்ச மனிதன், அப்பா-ஐயா. (48)

முரண்படு நெஞ்சினர் முதுசின வெஞ்சினர்
சரண்படும் வென்றித் தார்புய ரென்றது.

பதமலங் காரந் தருக்கமுள்ளார்படர்
வெஞ்சினச்ச
பதமலங் காரந் தவன்றிறத் தார்வந்து
பண்பணியும்
பதமலங் காரந் தரந்தொடர்ந் தேபுகழ்
பாத்தநல்ல
பதமலங் காரந் தவழ்புயத் தார்பதி
நாகையரே.

என்பது-தீவினை யடங்கலுக்கு மிடமாகிய மும் மலத்தை யுடையவரும் அவற்றின் காரியஞ் செலு த்துபவரும் தற்கிப்பவரும் அடர்ந்து வெப்பமுறுங் கோபத்தா லாணையிட்டு எதிர்க்கப் பின் வாங்காதவ ரும் அன்றியும் அத்தகைவலிய திறத்துத் துட்டரும் மடங்கிவந்து அழகுசூழும் பாதத்தை யலங்காரந் தரும்படி தொடர்ந்து மனந்தெளிந்து பகுத்துப் புகழ்ந்த புகழினது நல்ல அடையாளத்தோடு துவ ளும் வாகைமாலை தவழ்ந்த புயத்தார் நாகூரிணுயக ரென்றவாறு.—பதம்-இடம், மலம்-மும்மலம், காரம்-காரியம், சபதம்-ஆணை, மலங்கார்-ஒல்கார், அந்த-அத்தகை, வன்-வலிய, திறத்தார்-துட்டர், பதம்-பாதம், அலங்காரம்-பேரழகு, பதம்-அடையாளம், அலங்கல்-துவளல், ஆரம்-மாலை. (48)

நாகைய ரின்ப நறைபல னளித்தும்
வாகையர் முன்னும் வளந்தர நின்றது.

நாகைய ருந்தும்பி யின்னற வாமழை
நந்தனஞ்சூழ்
நாகைய ருந்தும் பிரபலத் தார்தந்த
நற்சுவையின்

நாகைய ருந்தும் பிரசமன் ஞேசுக
நல்கிய தும்
நகைய ருந்தும்பி மன்னருந் தேட
நடஞ்செய்வதே.

என்பது-இளமையும் அழகுமுள்ள அரிய வண்டுகள் மலர்கடோறுந் துளிக்குந் தேனது துவலையாகிய மழையுடைய நந்தா வனங்கள் சூழும் நாகூரிஞயகர் உயரும் பிரபல முள்ளார் அவர் தந்த நல்ல மதுரித்த நாவாலுங் கையாலு முண்ணுங் கள்ளல்லவோ விரும்பினோர்க்குச் சுகங்கொடுத்ததும் நடுவாகிய வொழுக்க முடையாரும் மதயானையின்மேல் வரும் அரசரும் தேடத்தேட நடனஞ் செய்வது மென்றவாறு.—அவர் உபதேசிக்குமறிவு பேரின்பத்தமுந்து தலைக் கொடுப்பதால் கள்ளென்றது. கைதொட்டு நாவாற் சொல்லுதலால் இரண்டானும் நுகர்தலை வேண்டிற்று இதன் பொருள் விரிப்பிற் பெருகும். நாகு-இளமை, ஐ-அழகு, அரும்-அரிய, நாகையர்-நாகூரார், உந்தும்-உயரும், நா-நாவு, கை-கரம், அருந்தும்-உண்ணும், பிரசம்-கள், நா-நடு, கை-ஒழுக்கம், அர்-விகுதி, தும்பி-யானை. (50)

செல்வரும் புலவருந் திரமோ லியரும்
நல்வகை முகக்கு நணிகழ லென்றது.

செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே.

என்பது-செவந்த நிறத்தையுடைய நிதிமகளின் செல்வ மிகுதியுடைய இளமைப் பருவத்தின் அரசர்கள் கவிகளின் சீரினிடத்துஞ் சொல்லினிடத்தும் போந்த குற்றங்களை யொழித்தலே செய்யும், அழகு பிரகாசித்த நாவினது ஒழுக்கத்தை யுடையவர்கள் சித்திரமு மடையாளமுமுள்ள முடியுங் குற்றங்களைத் தருகின்ற உயிர்களது வலி குறைய நடுவுநிலை பூண்ட கையு முடையவர்கள் இவரது செல்வத்தழகுடைய செவந்த கைகள் எந்நாளும் பரவா நிற்கும் வயலுஞ் சோலையுஞ் சூழ்ந்த மாதவஞ் செய்த நாகூரிறையகரது நன்மை பூண்ட பாதங்கள் இரண்டினையுமென்றவாறு.—ஏகாரம் - ஈற்றசை. செய் - சேய், செவப்பு-வனம், நிறம், மா-நிதிமகள், தவ-மிகுதி, நாகு-இளமை, அய்யர்-அரசர், சீர்-கவிச்சீர், பதம்-

சொல், சேகு-குற்றம், அரம்-ஒழித்தல், எ-தேற்றம், செய்-செய்யும், வனம்-அழகு, ஆதவம்-பிரகாசம், நா-நாவு, கை-ஒழுக்கம், அர்-விகுதி, சீர்-சித்திரம், பதம்-அடையாளம், சேகரம்-முடி, ஏசு-குற்றம், எய்வன-தருகின்ற வுயிர்கள், மா-வலி, தவ-குன்றல், நா-நடுவுநிலை, கையர்-கையினை யுடையவர், சீர்-செல்வம், பதம் - அழகு, சே - செவப்பு, கரம் - கைகள், மே - மேவும், பரவாநிற்கும், செய்-வயல், வனம்-சோலை, மாதவம்-பெரிய தவம், நாகையர்-நாகூரை யுடையவர், சீர்-நன்மை, பதம்-பாதம், சேகரம்-இரண்டும். (51)

கண்ட பொழுதே கதிதரு முகத்தை
யுண்டென் கிளவியா லுவமித் துரைத்தது.

சேகரந் தாங்கிளர் பங்கய மன்றுசெல்
விற்கதிரின்
சேகரந் தாங்கிருள் மையக னன்று
செறிகழைக்குள்
சேகரந் தாங்கிய ஞகையர் கோனருள்
சிந்திக்குநெஞ்
சேகரந் தாங்கி யருள்செய் மெய்மைத்
திருமுகமே.

என்பது-செறிவாகிய கரும்பின் சோலையுள்ளே எருதின மறைந்து அவிடத் தியலாநிற்கு நாகூருடையவர்களுக்கு அரசரது கொடைப்பயனை மாறாது நினைக்கு நெஞ்சமே செவந்த கிரணங் கிண்டப்படா நின்று சேற்றி லுண்டாகுந் தாமரை மலருமல்ல மேகத்திடத்திற் கதிர்க்கூட்டங்க ளிருளைச் சுமக்குங் களங்கந் தன்னிடங்கொண்ட மதியுமல்ல தீமையிற் புகுதாது பாவிகளைக் கையைப்பற்றிக் காத்துக் கிருபை செய்யும், அவரது திருமுகமே மெய்மையுடைய தென்றவாறு.—சே-செவப்பு, கரம்-கிரணம், தாம்-அசைச்சொல், கிளர்-கிண்டல், சேகரம்-கூட்டம், தாங்கல்-சுமக்கல், இருள்-இருளை, சே-எருது, கரந்து-மறைந்து, ஆங்கு-அவ்விடம், இயல்-பொருந்தல், நெஞ்சே-நெஞ்சமே, கரம்-கை, தாங்கி-காத்து. (52)

புட்பா னீதம் பொருத்தினீ ரெளியேன்
கட்பா லருட்கண் கணித்தி ரென்றது.

திருமுக மின்ன தெனவுணர்ந் தேபுட்கள்
திங்களின்க
திருமுக மின்னருள் பெற்றவன் றேதிசை
செல்புகழ்மு

திருமுக மின்னணி நாகைமன் னுசிற்
றடியவன்பால்
திருமுக மின்னலங் கண்ணுற் கணித்திரித்
தீவினைக்கே.

என்பது-தாங்களனுப்பிய விண்ண பத்திரத்தின் பயனை இன்னதென் றறிந்து புள்ளினங்கள் சந்திரன் போலுங் கிரணமுடைய உங்கள் முகமும் இனிய கிருபையும் பெற்றன அல்லவோ திசைகளிற் படரும் புகழ் வளராநிற்கும் பூமியாகிய மாதினுக்கு ஓர் ஆபரணமாகிய நாகூரி னாயகரே சிறிய அடியவனிடத்திற் றிரும்பி நன்மை யிலங்குங் கண்ணினால் மதிக்கக் கடவீராக இந்தத் தீவினையைப் போக்குவித்தற் கென்றவாறு.—திருமுகம் - விண்ணபத்திரம், இன்னது - இத்தன்மை யுடையது, கதிர் - கிரணம் - உம் முகம்-உங்கள் முகம், இன்-இனிய, அருள்-கிருபை, முதிரும்-வளராநிற்கும், உகமின்-பூமாது, திருமுக-திரும்புவீராக, மின்-ஒளி, நலம்-நன்மை. (53)

நங்நபி மரபி னவமணி யறிஞர்
தங்நனி யுள்ளத் தவமணி யென்றது.

தீவினை யாவழி காட்டச்சென் ருேற்குறு
செய்யிதுநந்
தீவினை யாவன வெல்லா மொரீஇயசெம்
மன்பரபா
தீவினை யாவகை காத்தவ நாகைய
சீர்மறையின்
தீவினை யாவலி ஞேர்பவ ருள்ளச்சிந்
தாமணியே.

என்பது-வேங்கைப் புலியானது சிதையாத பாதை காட்ட நடந்த சுபைனுவென்பவரி னுண்டகையும் நமர்களின் பாவச்செய்கையானவற்றை யெல்லாம் ஒதுக்கிய செம்மலும் ஆகிய நபிநாயகரது வங்கிஷத்தி லுதித்தவரே மகல்லதீவு இரங்காதபடி காத்தவரே நாகூரி னுயகரே சிறப்பாகிய வேதத்தின் சுவையினை யாவலால் உணர்பவ ருள்ளகத்திற் சிந்தியாநிற்கு மணியே யென்றவாறு.—தீவி-புலி, நைதல்-சிதைதல், தீவினை-பாவம், ஆவன-ஆகுவன, தீவு-மகல்ல தீவு, இனைதல் - இரங்கல், தீவு - சுவை, இன் - ஐ. இடைச்சொல். (54)

நாட்டணி கூறி நாகைய வின்பம்
பூட்டிய விழியருட் புகல்தரு கென்றது.

சிந்தா மணிநிழ னீர்நிலை யாம்பல்செந்
தாமரைத்தேன்
சிந்தா மணிநிழற் சஞ்சல வோசையிற்
றேங்கியுள்ளே
சிந்தா மணிநிழற் றுஞ்சுநன் னாகைய
செங்கணிற்பொ
சிந்தா மணிநிழ லென்பிணி தீர்தற்குச்
செய்திமன்னே.

என்பது-கடற்போலாகிய பெரிய குளிர்ந்த தடாகத்திடத்து ஆம்பல் செந்தாமரை யிவைகளின் பூக்களைக் கறித்துத் தேனினைச் சிந்தும் பெண்ணெருமையானது முத்துகளி னொளியுடைய சஞ்சல மென்னுஞ் சங்கின் குரவையால் உள்ளந் திகைத்துத் துவன்று ஆச்சாமரத்து நீழலின் மணலிற் றுயிலாநிற்கும் நல்ல நாகூரி னாயகரே உங்கள் செவ்விய கண்ணிற் பொசிந்து ஈரமணியுங் கிருபை செய்வீராக என்றன் பிணி நீங்குதற் கென்றவாறு.—மன்-அசை நிலை, சிந்து-கடல், ஆம்-ஆகும், அணி-பெருமை, நிழல்-குளிர்ச்சி,

சிந்து-சிந்துதல், ஆ-பெண்ணெருமை, மணி-முத்து, நிழல் - ஒளி, ஒசிந்து - துவன்று, ஆ - ஆச்சாமரம், மணில்-மண்ணில், நிழல்-நீழல், பொசிந்து-நீரரும்பி, ஆம்-ஈரம், அணி-அணிதல், நிழல்-கிருபை. (55)

உட்பகை புறப்பகை யொக்க முடித்தே
கொட்புறு திருநெறி கொண்டபொருளென்றது.

செய்தித்த வப்படை யாக்கத்தி னூற்றிரை
வாங்கிக்கரை
செய்தித்த வப்படை யாவுல குண்மலந்
தீவினைக்கை
செய்தித்த வப்படை யானையும் வென்று
திருவநெறிச்
செய்தித்த வப்படை யாளணி நாகைத்
தெளிப்பொருளே.

என்பது - ஒழுக்கத்தையுடைய தவச்செய்கை யாகிய ஆயுதமெடுத்த முன்னணியாகிய கொடிப் படைகளால் அலைகள் வளைந்து கரை செய்யுங் கைத்த சலத்தின் காப்புடைய உலகத்தையும் அதன் சேனை யையும் அகத்தின் மலங்களையும் அவற்றின் சேனை களையுந் தீங்காகிய தொழிலினைப் புலையும் பொய்மை

யாகிய பயனிலாச் சேனை யுடையவனையும் அவன் சேனைகளையும் அழித்து வெற்றிகொண்டு எல்லா வின்பத்தையு முடைய நடவையின் செய்தியது பெருக்கத்தை உண்டாக்குதலும் காத்தலும் அணிந்து நாகூரில் வாழுந் தெளிவினுற் றோற்றப்படும் பொருளே யென்றவாறு.

## சவத்தி ஞயுதமெடுத்த கொடிப்படைக ளாவன.

இறைவன்பா லுறுதிப்படுதல் உள்ளங் களங்கமற் றிருத்தல் அகத்தி னச்சங் கொள்ளல் வணக்கங் கொண்டு நிற்றல் அறிவொடு நிற்றல் நேர்மையொடு நிற்றல் முறைமையைப் பேணல் அவனது காவற் பெறுதல் அவனிடத்தில் அனைத்து மொப்பித்தல் இன்பத்தினுந் துன்பத்தினும் அவனது பொருத்தங் கொள்ளல் ஆகிய பத்தும் இவைபோல்வனவும் உணர்ந்துணரும் புத்தியாகிய தலைவன் சேனை.

உள்ளத்தின் மறதியொழிதல் ஆராய்ச்சி யுறுதல் வேறுபட நோக்காது விழிகளைக் காத்தல் உறுவன வற்றையே பெறுபேறுக் கொள்ளல் இறைவனது துதியை நிலைப்படுத்தல் அவன் விதித்தனவற்றிற்

குடன்படல் நிறையழியாக் கற்பொடு நிற்றல் உப தேசப் பொருளினை நாளுந்தேற்றல் தீவினையைக் காத்தல் நல்வினை யெடுத்தல் ஆகிய பத்தும் இவை போல்வனவும் அறிவாலறியும் அறிவாகிய தலைவன் சேனை.

ஆக்கைக்கும் ஆவிக்கும் வேண்டிய பொருள்களில் விதித்தனகொள்ளல் விலக்கியனவற்றை நீக்கிவிடுதல் இறைவன்பால் பற்று நிலைத்தல் மாயமருளின் மயக்க மறுத்தல் அவனையே விசுவதித்தல் வேறு மியல்பு களை யொதுக்கிவித்தல் தன்னியல்பை நினைத்தெப் போதுஞ் சஞ்சலம் பதித்தல் தன்பிழை பொறுக்குந் தகைமை தேடல் இரவிற்றுயில் நீத்தொழிந்து தொழு திரத்தல் அவனது வல்லபத்திற்குத் தன்னேலாமை யை நோக்கி யிரங்கல் ஆகிய பத்தும் இவைபோல் வனவும் உறவினிலைப் படுத்துந் துறவாகிய தலைவன் சேனை.

மானம் பேணல் நட்பினைப் பேணல் நயமுமிடறுந் தெரிந்துகொள்ளல் இணக்க நயந்தரல் இறைவனைத் தன் காரிய மனைத்தினுக்குங் கருத்த னாக்கிக்கொள் ளல் யாதோர் பொருள்களிடத்தும் வெறுப்பென்பன

எடாதகற்றல் யாவரிடத்துந் தண்மையொடு நிற்றல் வாய்மையைப் பேணல் எக்கருமத்தினு மிறைவன் பாற் சார்தல், மற்றோர் பொருள்களிற் சார்தலை விடுதல், ஆகிய பத்தும் இவைபோல்வனவும் தன்னை யொழித்து அவனை நினைத்தலாகிய தலைவன் சேனை.

## உலகு உண்மலம் தீவினைபுனையும் அவப்படையாவன.

முகவிச்சையாகிய வாரம்பற்றல், எக்களிப்புக் கொள்ளல், யாதோர் காரியத்தையும் பொடுபோய்க்கா விடுதல், பயனிலா வியல்புகொள்ளல், விளையாட்டிற் பொழுதுபோக்கல், பொய்ச்சத்திய மேற்கொள்ளல், படிறுசொல்லல், மூடத்துவமே முயறல், மாறுபாட்டிற் செல்லல், திறக்கேடுசெய்தல், ஆகிய பத்தும் இவைபோல்வனவும் கலகங்கொண்ட உலக மாயையாகிய தலைவன் சேனை.

ஆசைப்பெருக்கம், உண்மதத் துழறல், உலோபமெடுத்தல், எவற்றினும் அகங்குவிந்து கிடத்தல், கடுகடுப்போ டெறிதல், வர்மித்துத் திரிதல், மேலெண்ணம் பெருக்கல், சோம்பல் கொள்ளல் வேட்கையே பதிதல், உலுத்தகுணத்தி லொப்பற்று

நிற்றல், ஆகிய பத்தும் இவைபோல்வனவும் காணத் தோற்றும் ஆணவமாகிய தலைவன் சேனை.

பொறாமை யுடைமை, இரக்கமில்லாமை, இறுமாப் புடைமை,அகத்தின் பெருமையாகிய தன்னை மதிப்பு, சதிமானஞ் செய்தல், வஞ்சனை வைத்தல், குபாடம் பயிறல், நீதி வழுவல், தூடணிப்புக்கொள்ளல், விதி முறை மறுத்தல், ஆகிய பத்தும் இவைபோல்வன வும் எமம்பெறுத காமமாகிய தலைவன் சேனை.

அவஞாயக்கொடுமை, செய்தல் அடைக்கலப் பொருளுக் கழிவுசொல்லல், உள்ளமொளிரா திரு ளினை யுய்த்தல், நம்பிக்கை யிழத்தல், சினமேமீறல், வாக்கு மனமும் வேறுநிற்றல், கருத்திற்கயமை யெப் போதுமாடல், இறைவனதாணையி லியத மையுறல், ஒழுக்கு நெறியில் வழுவிநிற்றல், ஆசானருள் விடுத் தகல நிற்றல், ஆகியபத்தும் இவைபோல்வனவும் மிகைப்பிற் செலுத்தும் அகப்பேயாகிய தலைவன் சேனை.

திருவநெறியென்னும் பேரின்பமடங்கலுந் தரு கின்றவழியிற் றலைப்படவொட்டாமல் வந்தெதிர்த்த வுலகமாயையின் சேனைமேல் தங்கள் துறவின்

சேனையையும், ஆணவத்தின் சேனைமேல் அறிவின் சேனையையும், காமத்தின் சேனைமேற் புத்தியின் சேனையையும், அகப்பேயின் சேனைமேல் நினைப்பின் சேனையையும், செலுத்தி அடர்த்தேற்றி யொவ் வொன்றிற்கு ஒவ்வொன்று மிரண்டுமாகப் போரா டித் தலைமயங்கித் தெறித்துவிழத் தவத்தின் அங் கங்களாகிய பல ஆயுதங்களாலே வெட்டித் தலைகளை வெளியிற் றோற்றாமல் ஆழத்திற் புதைத்து உடல் களையு மற்ற வுறுப்புகளையும் அடியிற் போட்டுத் துவைத்துச் சென்று முப்பத்தொன்றாங் கவியில் வகுத்தவுடல் நிற்கு முந்தின துறையில் விடுதியாக விறங்கி ஆங்குள்ள பொருள்களின் காட்சியும், இன்ப மும் பெற்றுத் தங்கள் சேனைகளிற் சில அவணிற் காக்கவைத்துப் பின்னர் அடுத்த துறையேறி யாங் கும் இம்முறையிற்றிச் சென்று இத்தன்மையாக மற்ற எல்லாத் துறையிலும் புகுந்து எல்லாச்சேனைத் தொடர்ப்புகளெல்லா மொதுக்கி அந்நெறியின் அந் தத்தின் ஆடும் ஆநந்தமெல்லா மாடிமீண்டு துறைக டோறு மிறங்கித் தங்கள் சேனைகளோடும் வெளிப் பட்டுவந்து ஒப்பவொழுகி அது இதுவென்னுந் தட் டிரண்டினிற் றாக்குந் தராசியி ளுக்குப்போலச்

சமமாக வொருதலையுங் கனக்காமல் ஆளுந் தகைமை யுடையராய்த் தம்மைத் தொடர்ந் தொழுகுவாரை யந்நெறியின் துறைகடோறுஞ் செலுத்திக் காட்சியு மின்பமும் பெறச் செய்யு முறைமையால் திருவ நெறிச் செய்தியின் பெருக்கத்தைப் படைத்தலும் ஆளுதலும் அணிந்தவ ரென்ற தென் றுணர்க இவற்றை விரும்பின் ஒரு நூல்போலாகப் பெருகும் ஆயினும் அகத்தின் அமைந்த அரியகண்ணின் அடர்ந்த படலத்தை அறுத்து நீக்கி ஆசான் சொல் லின் அமைந் தாராய்ந்து அடையநோக்கும் அங்க மெட்டும் அணிந்தவருக்கு ஆநனந்தம் அருளும் அறிவாற் பூரணம் ஆதுமென் றறிக.

செய்தி-ஒழுக்கம், தவம்-தவசு, படை-ஆயுதம், ஆக்கம்-முன்னணியாகிய கொடிப்படை, செய்-செய் யும், தித்தம்-கசப்பு, அப்பு-சலம், அடை-அடைத் துக் காத்தல், கைசெய்தல்-புனைதல், தித்து-பொய், அவம்-பயனின்மை, படை-சேனை, செய்தி-வர்த்த மானம், தவ-மிகுதி, படை-படைத்தல், ஆள்-ஆளுதல். (56)

நிலைத்தவென் னறிவு நீரே யாகில்
உலைத்தவில் சுகமே யுடற்கோங்கு மென்றது.

தெளிக்கப் பகலவ னொத்தே யறிவிற்
சிறந்துபன்மைத்
தெளிக்கப் பகல வருபொருளே மழைச்
சீதஞ்சந்தந்
தெளிக்கப் பகலரு நாகைபி னும்புகழ்
சேர்முரசந்
தெளிக்கப் பகலவிர் வாகைய ராகஞ்
செழித்திடுமே.

என்பது - உள்ளத்தைத் துப்புரவாக்கினுற் சூரியனைப்போல அறிவிடத்திற் சிறந்து பலபலநினைவுகளை யொதுக்கி கவர்நீங்க வாராநின்ற அருத்தமே மழையது குளிர்ச்சியானது சந்தனத் திவலைகளைத் தெளித்தலாலும் பகுத்தற்கரிய உங்கள் புகழ் சேர்ந்த நாகூரினிடத்தில் முரசங்க ளொலித்தலாலும், ஒளிவு பிரகாசிக்கும் ஒழுக்க முடையார் உடலங்கள் துன்பநீக்கிச் செழுமை கொள்ளுமே யென்றவாறு.—அருத்த மென்பது, உள்ளறிவிற் கென்றுணர்க அத்திவலையானும், ஓசையானும், இப்பயனுண்டாகுமேல் என்னறிவே தாங்களாயின் எப்பயனு முண்டாவதற்கு ஐயமில்லையெனத் தேற்றியது, வருடந்தோறுந் திருவிழாவிற் சந்தனமழை

பெய்தல் வழக்கமென்றறிக. தெளிக்க - துப்புர வாக்க, பகலவன் - சூரியன், பன்மை - பலநினைவு, தெளி-தெள்ளி, கொழித்து, கப்பு-கவர், அகல-நீங்க, தெளிக்க-தூற்ற, பகல்-பகுத்தல், அரும்-அரிய, தெளிக்க-ஒளிக்க, பகல்-ஒளி, அவிர்-பிரகா சித்தல், வாகை-ஒழுக்கம்.

ஒன்றிய பொதியத் துயர்தமி ழதனிற்
றென்றற் றாதினைச் சிறப்பக் கூறியது.

செழிய னகமலை யாவதென் றூல்வரு
செந்தமிழுஞ்
செழிய நகமலை யாச்சுடர் கீர்த்திச்
சிறந்தமையால்
செழிய நகமலை யார்பொழி ஞகையர்
தேகமெல்லாஞ்
செழிய நகமலை யாய்ப்புள கத்தொடு
செப்புமின்னே.

என்பது-பாண்டியன் றேயத்து மலையி னுண்டாய தென்றற்காற்றே வருஞ் செவ்வியதமிழி மாட்சிமை யுடைத்து, என்னெனில் மலைகளிற் பொருந்திய விளக்குபோல எங்கும் விளங்கிய கீர்த்தி யத்தமி ழிடத்திற் சிறந்திருந்தமையால் ஆயினும் நின்மாட்சி

மையால் வளப்பத்தையுடைய நிதிமகளுங் கலைமக ளும் பொருந்திவாழும், பொழில்சூழ்ந்த நாகூரிறையக ரின் உடலமெங்கும் அழகிட்டுப் பிரகாசிப்ப மாறுத புளகஞ்செய்தலோடும், எனது துயரத்தையுங் கூறச் செய்வாயாக வென்றவாறு.—புளகமுஞ் சொல்லுத லுந்தென்றற்கே யுரிமையால் செய்கையைத் தொக் கது. செழியன்-பாண்டியன், அகம்-இடம், மலை-பொதியமலை, செழுமை-மாட்சிமை, நகம்-மலை, மலையா-பொருந்திய, செழியன-வளப்பமுடையன, கமலை-நிதிமகள், கலைமகள், ஆர்-பொருந்தல், செழுமை-அழகு, செழிய-அழகிட்டு, நக-பிரகாசிக்க, மலையா-மாறுத. (58)

நவநிலை யமைந்த நாகையின் வள்ளல்
அவயவத் தன்மையின் ஆக்கங்கூறியது.

செப்பங் களவரும் பாவச்செய் நாகையர்
செங்கழலால்
செப்பங் களவரும் பாலைக டேன்சிந்துந்
தீஞ்சொலினல்
செப்பங் களவரும் பாமய மாமுளஞ்
செவ்வியினல்
செப்பங் களவரும் பாமுலை மாதர்
திகைப்பதுவே.

என்பது-செல்வனுகுதலைக் கள்ளரும்பெறச் செய்யு நாகூரினுயகரது செவந்த பாதங்களால் வீதிகளி லுள்ள களாவு மரியபாலையு முடனே பழுத்துத்தேனி னைச்சிந்தும், இன்னும், அவரது மதுரித்த சொல்லி னுல் உன்மத்த முண்டாகாது உள்ளங்கள் நடுநிலை மயமாகும், இன்னும், அவரது வடிவினுல் செப்பும் அரும்பும் அளவொக்கு முலைகளையுடைய மாதர்க ளுள்ளந் திகைத்தலைக் கொள்ளு மென்றவாறு.— செப்பம் - செவ்வன், களவர் - கள்ளர், பாவ-பெற, செப்பம்-வீதி, களவு-களாமரம், அரும்-அரிய, பாலை-பாலைமரம், செப்பம் - நடுவுநிலை, களவு-உன்மத்தம், அரும்பா-உண்டாகா, செப்பு-பொற் செப்பு, அங்கு-அவ்விடம், அளவு-வரையறை, ஆம்-ஆகும். (59)

வேந்தர்க டொண்டினும் விழுமிய துயர்தீர்
மாந்தர்கள் வாழ்த்தும் வாயுறை யென்றது.

திகைப் பலகோடி யடர்புகழ் நாகைய
செங்கதிரே
திகைப் பலகோடி யரசர்க டொண்டினுஞ்
சீரிதும்நீ
திகைப் பலகோடிய சிந்தையர் துன்பஞ்
சிதறியுடல்

திகைப்பல கோடிய போதவர் வாழ்த்துந்
திருப்புகழே.

என்பது-திசைகளிற் பலபல கோணங்கள் எவற்றி னுஞ் செறிந்த புகழுடைய நாகூரிறையகரே செவந்த கிரணத்தின் வாளெடுத்தகை வலியுடைய ஒருகோடி வேந்தர்கள் செய்யும் அடிமைத் தொழிலினுஞ் சீர் மை யுடையது உங்கணீதி கைத்ததல்ல இனிமை யுடையது, ஆயினும், வருத்தத்தாற் குணங்கிய சிந் தையுடையார் தங்கள் துன்பஞ் சிதறி யுடலினது மயக்கவினங்கள் ஓடிப்போனபோழ்தில் அவர் வாழ் த்து மழகாகிய புகழானதே யென்றவாறு.—பலபல விரோதங்களுடைய உயிர்கள் அவற்றைவிட்டொழி ந்து நேர்மைபெறச் செய்விக்கு நீதியினாற் பிறந்த புகழும் இவ்வளவு சிறத்தலில்லை யென்பதை நோக்கி நீ திகைத்ததல்ல, இனிமையுடையதென்றுங் கூறி, இவ்வாயுறை வாழ்த்து ஒருறுப்பின் செய்கைகொள் ளாது உடலின் அவயவம் அடங்கலும் உள்ளத்தோ டொத்து ஆநந்தப் பரவசத்தால் எழும் புகழாகை யால் திருப்புகழேயென்று சிறந்த அடைபொடு தேற் றமுங்கொண்டு கூறினரென் றுணர்க.—திருப்புகழ்- எழுவாய், சீரிதுஎன்னும் வினைக்குறிப்புமுற்று பய

னிலை—திகை-திசை, பல-பல்பல, கோடி-கோணங்கள், எதி-வாள், கை-கரம், பலம்-வலி, கோடி-நூறு லட்சம், நீதி-நியாயம், கைப்பல-கைத்ததல்ல, கோடிய-குணங்கிய, திகைப்பு-மயக்கம், அலகு-எண். ()

சேயக மேன்மைச் சிறப்பினுலக
நாயகன் கையினது நலநய முரைத்தது.

திருப்புக் கதிவன நாகையர் கோன்மனைச்
சென்றொலிய
திருப்புக் கதிவன வாரியி னேகரை
சேர்ந்தவங்கந்
திருப்புக் கதிவன சம்பொருங் கைத்திரி
தோசமுங்கூ
திருப்புக் கதிவன காநிற்ப வங்கந்
தெளிதருமே.

என்பது-நிதிமகள் புகுந்திருந்து அதிக அழகு சேர்ந்த நாகூருடையவர்கள் நாயகரது மன்றிலிருந்து ஒருபோதில் தங்கள் மனைக்குட்புகுந்து சத்தம் அதிரும் உப்பூறிய விரைந்தோடு புனலின் கடலிடத்திற் கரைசேர்ந்த கப்பலைத் திருப்புங் கதித்த வனசமலரைப் பொருவுங் கையானது வாதம், பித்தஞ், சிலேட்டுமம், இம்மூன்றால் வருந் தோஷங்களுங் குளிரும்

உப்புசமும் அழிய அங்கம் ஒளிவினைப் பிரகாசிப்ப தாகத் தெளிவினைத் தருதலைச்செய்யு மென்றவாறு.- கையென்பது - எழுவாய், தருமென்னுமுற்று - பயனிலை. திரு-நிதிமகள், புக்கு-புகுந்து, அதி-மிகுதிப் பொருளைத் தருமடைசொல், வனம்-அழகு, அதிர்-அதிர்தல், உப்பு-உவர், கதி, விரைவு-வனம், புனல்-திருப்பு, திருப்பிவித்தல், கதி-கதித்தல், வனசம்-தாமரை, கூதிர்-குளிர், உப்பு-உப்புசம், உக்க-அழிய, திவம்-ஒளி, நகாநிற்ப-பிரகாசிப்ப. (61)

என்குண மறியா தென்னெனக் கிளவி
தன்குணப் பாங்கியொடு தான்வினவுது.

தருமே னிவந்த மலராற் புயலுந்
தடமணப்பந்
தருமே னிவந்த கவினுற் றென்னுகைத்
தலைமையற்பு
தருமே னிவந்த மளித்துளம் வாடத்
தமக்குரிமை
தருமே னிவந்த பசலையுங் காண்கிலர்
தார்குழலே.

என்பது - பூந்தோட்டத்திலுள்ள தருக்களது மே லுயர்ந்த கோட்டின் மலர்களினுல் தவழு மேகமும்,

அணிதலினுற் பெரிய மணப்பந்தலுமே யொன்றற் கொன்றெக்குந்தென்னுகூரில் தலைமைசெய்யும் புது மையுடையவரும், எதுகாரணத்தினுல் இக்கோலமுங் கொடுத்து என்னுள்ளம் வாடவும் அவர் தமக்கு உரி மையாகக் கொடுத்த மேனிபூத்த வேறுபட்ட நிறத் தையுங் காணுதிராநின்ருர் தார்தாங்குங் கூந்தலு டைய பாங்கியே யென்றவாறு.—மேகமானது கோட் டில் தவழ்தலுரிமையும், பந்தலானது அணித லுரி மையும் பெற்றமையா லென்றுணர்க. தரு-தருக் கள், மேல்-ஆகாயம், நிவந்த-உயர்ந்த, பந்தர்-பந்தல், ஏ-தேற்றம், நிவம்-உவமை, தகவு-உரிமை, அற்புதர்-புதுமையுடையவர், என்-வினு, இவ்வந்தம்-இக்கோ லம், உரிமை-சொந்தம், தரும்-கொடுக்கும், மேனி-சரீரம், வந்தபசலை-பூத்த வேறுபட்டநிறம். (62)

பூரணப் பொருளிற் புகழொடு தோன்றுங்
காரணப் பெயரின் கருத்தறி வித்தது.

தாரா தரமதி கந்தரப் பானுத ரத்தரத்தண்
தாரா தரமதி காலும் பரிம்பர் தரப்புகழ்சீர்
தாரா தரமதி கவுதென்ன நாகையர் தாங்கறுன்பந்
தாரா தரமதி காரமேன் போறத் தளிப்ப வர்க்கே.

என்பது-தாரகைக் கூட்டங்கள் புகழ்தரச் சந்தி ரன் புகழ்தர வானம் புகழ்தரச் சூரியன் புகழ்தரக் குளிர்ந்த மேகம் புகழ்தரப் புத்தியூறும் வானவர் புகழ்தர மனுடர் புகழ்தரக் கீர்த்தியாகிய மாலையோடு ஆதரவுமதிக்கும் கவுதென்று நாகூரினுபகர் காரணப் பெயரைப் பெற்றுக்கொண்டது என்னைப்போலத் தீவினை முதலான வேதனையிற் கிடந்து உள்ளங் கலங்குமவருக்குத் துன்பங்களைத் தராத தன்மை யதிகரித்தலா மென்றவாறு.—தரவென்னு மெச்சந் தாங்கலைக்கொண்டு முற்றிற்று, தாங்க லெழுவாய் அதிகாரம் பயனிலை, இக்குவ்வுருபிற்கு தாராத தன் மை உபகாரப் பொருளாயிற்று, தாரா-தாரகை, தர-கொடுக்க, மதி-சந்திரன், கம்-வானம், தாராதரம்-மேகம், மதி - புத்தி, தார் - மாலை, ஆதரம் - ஆதரவு, மதி-மதித்தல், தாரா-தராத, தரம்-தன்மை, அதிகா ரம்-அதிகரித்தல். (63)

ஊர்வளங் கூறி யுயர்போ தகஞ்சேர்
ஏர்களி றெத்தி யென்றுகை தொழுதது.

தத்தளிக் குஞ்சரத் தாவிசைக் கும்பம்மித்
தண்டுளிசிந்

தத்தளிக் குஞ்சரற் றூநிற்ப வோதிமந்
தாலொலிபோ
தத்தளிக் குஞ்சரத் தாமரைப் பொய்கைத்
தண்ணுகையமோ
தத்தளிக் குஞ்சரத் தாயாதி கன்றூத்த
தன்மையற்கே.

என்பது-பாயும் வண்டுகளின் ஓசைக்கும், நாணற்கள் தாவும் ஓசைக்கும், அஞ்சிப் பதுங்கிக் குளிர்ந்த திவலை சிந்த வொதுங்கிக் குஞ்சுகளிரைத்து நிற்கக் கண்டு அன்னங்கள் தாலாட்டும் ஓசையின் மிக்கினுற் காத்துக்கொள்ளு மாலைபோலு மொழுங்காகக் கிடந்த தாமரைப் பொய்கையின் சீதளம் பொருந்திய நாகூரினுயகரே உவகையின் கருணையுடைய யானையாகிய தாயாகக் கடவீர் அதன் கன்றூத்த தனியவனுக் கென்றவாறு.—காதன் மிகுத்த தாய் யானைத்தாயும் பேதமை மிகுத்த பிள்ளை யதன் கன்று மாதலாலெனக்கொள்க. தத்து-பாய்தல், அளி-வண்டு, கும்-இடைச்சொல், சரம்-நாணல், சிந்த-சிதற, தளி-தள்ளி, ஒதுங்கி-குஞ்சு, பார்ப்பு-அரற்றல், இரைத்தல்-போதம், மிகுதி-அளித்தல், காத்தல்-சரம்-மாலை; மோதம்-உவகை, அளி-கருணை, குஞ்சரம்-யானை. ()

ஒண்டொடி வாட்ட முணர்ந்து செவிலி
கண்ட தோழியொடு கையறை கூறியது.

தன்மய நாட்டம் பதிநாகை யண்ணறம்
பால்வைத்தகா
தன்மய ளூட்ட மதன முஞ்சோகஞ்
சந்தாபமயர்
தன்மய ளூட்டந் துயிலாமை யாவுந்
தரமகளின்
தன்மய நாட்டந் நலார்க்கென்னை யாங்கொ
றடங்கண்ணியே.

என்பது-தனது மகிமையை நிறுத்தும் அழகிய நாகூரி னுபகர் தம்மிடத்து வைத்த ஆசையானது மயக்கமும் ஓயாது நினைத்தலும் மௌனமும், சோம்பலும், வெப்பமும், உடலயர்ச்சியும், உள்ளுழற்சியும், விழிக டுயிலாமையும் அன்றி மற்றை மெய்ப்பாடெல்லாந் தருகின்றதால், என் மகளின் றனிமை யந்த நாட்டிலுள்ள மடவார்கட் கிடையி லெவ்விதமாகுமோ பெரிய கண்ணை யுடையவளே யென்றவாறு.—தன்-தனது, மயம்-மகிமை, நாட்டல்-நிறுத்தல், அம்-அழகு, காதல்-ஆசை, மயல்-மயக்கல், நாட்டம் - ஓயாது நினைத்தல், மதனம்-மௌனம், சோகம்-சோம்

பல், சந்தாபம்-வெப்பம், அயர்தல்-தளர்ச்சி, மயல்-உள்ளுழற்சி, நாட்டம்-விழி, தன்மய-தன்மை அ, தன்மை-தனிமை, அ-சுட்டு, நாடு-உலகம், அந்நல் லார்-அழகிய பெண்கள். (65)

அண்ணல் பெரும்பதி யணிகொள் மனுரு
வண்மையின் றன்மை மதித் துரைத்தது.

கண்ணிக் கொடியமுத் தம்மானை யாடுங்
கருங்குழற்பூங்
கண்ணிக் கொடியன மின்னார் நன்னுகைத்தங்
கக்கலசங்
கண்ணிக் கொடிய மனுரு வுதயத்தைக்
கண்டவர்தங்
கண்ணிக் கொடிய துயர்நோய்கள் போமொரு
காதமட்டே.

என்பது-கரும்பினது கணுக்கள் தெறிப்பச் சிந்து முத்துகளை அம்மானையாடும் பூமாலைசூடுங் கருங்குழலும், கொடிபோல இடையுமுடைய உழத்தி மாதர் நயங்கொண்ட நாகூரி னுயகரது தறுகாவென்னுந் தேவாலயத்தின் நாற்றிசையும் தங்கக் கலசமுங் கட்டிய கொடியுமுடைய மனுரு வென்னுங் கோபுரத்தின் உதயத்தைக் கண்டவுடனே கண்டவர்கள் தங்க

ளிடத்திலுள்ள இந்நோய்போற் கொடிய துயரத்தை யுடைய நோய்களெல்லாம் போய்விடும் ஒரு காதவழிக் கப்பாலென்றவாறு.—இக்கொடியவென்று கவி நாயகனது துயரத்தைச் சுட்டியபது. கண்-கணு, இக்கு-கரும்பு, ஓடிய - தெறிக்க, கண்ணி - மாலை, கொடி-பொற்கொடி, கண்ணிக்கொடி-கட்டிய துகிற்கொடி, கண் - இடம், இ - இவனது நோயினைச் சுட்டல், கொடிய-கொடுமையுடைய. (66)

அணிகதி யுதவு மரியகற் பகமே
கணிகையிற் படாஅ காத்தி யென்றது.

காதமட் டாயுதம் போல்வெட்டி நஞ்சங்
கலந்தடர்ந்து
காதமட் டாயுக ளத்திருக் காலுள்ளங்
கைக்கொள்வர்க்கா
காதமட் டாயு மறிவோடு காத்தி
கனிபொழில
காதமட் டாயுக ளுந்திரு நாகையங்
கற்பகமே.

எனபது-கொலைபுரியும் வாளாயுதம்போல நஞ்சொடு பழகி மேற்சென்று வெட்டிச் செவிகளை யதட்டாநிற்கு மிரண்டு கண்களா லுள்ளத்தைக்

கைவசஞ் செய்பவராகிய கணிகை மாதர்கட்கு உள்ளாகாதவரையும், அறிவு தந்து காத்துக் கொள்வீராக பழங்களையுடைய சோலையிலுள்ள பெரும்புனலடங்கலுந் தேனுகப் பாயும் செல்வ நாகூரி லிருக்குங் கற்பக விருட்சமே யென்றவாறு.—காதம்-கொலை மட்டாயுதம்-வாள், காது-செவி, அமட்டா-அதட்டா நிற்கும், உகளம்-இரண்டு, திருக்கு-கண், ஆகாதமட்டு-ஆகாதளவு, ஆயும்-ஆராயும், அகாதம்-பெரும் புனல், மட்டு-தேன். (67)

கற்புடை நாயகிக் கண்மணி பேர
கற்ப மளித்தெனைக் காத்தி யென்றது.

கற்பகத் தாவிசை வாளியி னீரருள்
காவலர்சேய்
கற்பகத் தாவிசை நாயகி பேரகம்
பார்பபல்வி
கற்பகத் தாவிசைத் தண்வய ஞகைய
காய்பிணிதீர்
கற்பகத் தாவிசை யம்பெற வேழையைக்
காத்திமன்னே.

என்பது-கல்லு பிளக்கத்தாவும் விசையுள்ள அம்பினுல் நதி யழைத்துத்தந்த காவலாளருடைய மகளா

கிய கற்பிடத்து வலியாற் புகழ்பெற்ற நாயகியின் பேரரே, வலம்புரிச் சங்கார்ப்ப பலபல விகற்பத் துடைய பசுவினங் கூப்பிடு மோசையுள்ள குளிர்ந்த வயல் சூழ்ந்த நாகூரி னுயகரே, கடிய பிணிகளைத் தீர்க்குங் கற்பங்களுடைய கடவுளே, வெற்றிபெற வேழையைக் காத்துக்கொள்வீராக வென்றவாறு.— மன்-அசைநிலை, கல்-மலைக்கல், பக-பிளக்க, தாவல்-பாய்தல், விசை-சீக்கிரம், கற்பு-மகளிர் கற்பு, அகம்-இடம், தா-வலி, கம்பு-சங்கு, விகற்பம்-வேற்றுமை, கத்தல்-கூப்பிடல், ஆ-பசுப் பொது, இசை-ஓசை, கற்பம்-மருந்து, கர்த்தா-கடவுளே,விசயம்-விசையம்-வெற்றி. (68)

வசந்த காலத்தும் வனந்திகழ் அஃறிணை
இசைந் தேத்துவநும் மிசையே யென்றது.

காத்திகைத் தேதத்த தத்தைகொக் கொக்கக்
கதத்துக் கொத்திக்
காத்திகைத் தேதுத்த கத்திதக் கீதத்த
கத்துக்கொத்துக்
காத்திகைத் தேதொத்தித் தாதுகத்தித் தித்த
காதத்தைத்தேக்
காத்திகைத் தேதத்தித் தூதத்த நாகைக்கத்
தாத்துதியே.

17554

என்பது-வேனிலது காந்தி கசந்து துன்பித்த கிளிகள் தேமாம் பழத்தோடு கோபித்துக் கொத்தித் தத்தம் பெடைகளைக் காத்துக்கொடுத்தே தின்னுமிடத்தில் உரிமையாற் கூவும் ஓசைகளின் பொருள்களும், அன்றியும், ஓசையும் பூங்கொத்து முடைய சோலைப் புறத்தில் வண்டினங்கள் படர்ந்து தாதுதிர மதுரித்த மதுவினை நிறைய வுண்டு திகைத்துப் பாய்ந்து ஆர்வஞ் செய்தலிற் கிடந்த பொருள்களும் நாகூரின் கடவுளது துதிகளேயா மென்றவாறு.—கீதத்த ஊதத்த என்பதிற் போந்த பன்மை விகுதி யவற்றின் பயன்களைக் குறித்து நின்றது, இவ்வெழுவாய்க்குத் துதியே யென்பது, பயனிலை யென்றுணர்க. தத்தித்தென்பது முற்றுவினை, எச்சமாயிற்று. காத்தி-காந்தி, வேலனது காந்தி, கைத்து-கசந்து, ஏதத்த-துன்பித்த, தத்தை-கிளிப்பிள்ளைகள், கொக்கு-மாமரம், ஒக்க-ஒடு, கதத்து-கோபித்து,கொத்தி-கோதி, காத்து-காவல் புரிந்து, இகைத்து-கொடுத்து, துத்து-தின்னும், அகத்து-இடத்தில்,இதம்-உரிமை, கீதம்-இசையினோசை, கத்து-கூவுதல், கொத்து-பூங்கொத்து, கா-சோலை, திகை-திசை, தே-வண்டுகள், தொத்தி-படர்ந்து, தாது-மகரந்தம், உக-உதிர, தித்

தித்த - மதுரித்த, காதம் - மது, தேக்கா - நிறைய வுண்டு, திகைத்து-மயங்கி, தத்தி-பாய்ந்து, ஊதல்-ஆரவாரம், நாகை-நாகூர், கத்தா-கடவுள், துதி-துதித்தல். (69)

பல்வள நாடணி பதிநா கூர
கல்வியி னருட்கடை கணிதகி யென்றது

கத்தா தவநகைப் பாலருந் தேனுங்
கனிகடுன்ன
கத்தா தவனகைப் பாலணு காக்கட
நாகையமோ
கத்தா தவனகைப் பாலனை வேனைக்
கருத்தன்சமு
கத்தா தவனகைப் பாலவி ரட்சி கடைக்
கணித்தே.

என்பது - இரைத்து நிற்கும் பெண்ணெருமைக ளின் முலைமுறுகி யொழுகு மிகுந்த வின்பமுள்ள பாலும், அரியதேன்களுங், கனிகளின்சாறும் செறியு மிடத்தையுடைய சூரிய கிரணந் தன்னிடத் தணு காத பொழில்சூழும் நாகூரி னுயகரே மோகத்தா லுண்டாகுந் தாகத்தினது கசப்பா லுழலா நிற்கு மென்னைக் கருத்தை யுடையவனது சமுகத்தை

யுடையவரே, தவத்தின் மகிழ்ச்சியுள்ள பாலகரே, உங்கள் கடைக்கணி ேநாக்கத்தாற் கணித்திரட்சிப் பீராக வென்றவாறு.—கத்து-இரைத்தல், ஆ-பெண் ணெருமை, தவ-மிகுதி, நகை-இன்பம், பால்-பால், அகத்து-இடத்தையுடையது, ஆதவன் - சூரியன், நகை-ஒளி, பால்-பக்கம், மோகத்து-ஆசையால், ஆ-ஆதல், தவனம்-தாகம், கைப்பு-கசப்பு, சமுகத்தா-முன்னிலையானவரே, தவம தவன் தவசு-நகை, மகிழ்ச்சி-பால-பாலகரே. (70)

பம்மிய வெறுமை பவப்பிணி யிவற்றில்
வெம்மை யகற்றும் விழைபுய லென்றது.

கணித்தி லம்பாடு மனக்களிப் பாலெமைக்
காய்ந்துபவங்
கணித்தி லம்பாடு மடாநின்ற வால்கன
கத்தின்மணி
கணித்தி லம்பாடு மரகத நீலங்
கதிர்செய்பல
கணித்தி லம்பாடு மலைபொரு நாகைக்
கரும்புயலே

என்பது - மனமருட்சியினலே கேடுகளை யெண் ணினேமல்லோம் ஆதலால் எங்களைக் கோபித்துப்

பாவமும் வெறுமையு மதித்துப் போர்செய்யா நின்றன தங்கத்தினழுத்திய மணிகளு முத்துகளும் பொருந்து மரகதங்களும் நீலங்களும் ஒளிவுசெய்யுஞ் சாளரவாயிலின் மாளிகைகளது பெருமை மலைகளைப்பொருவு நாகூரிலுள்ள காளமேகமே யென்றவாறு.—பாவம் வறுமை இரண்டினையுங் கருணையாகிய புனலாயவித்திடுவீ ரென்றுகொள்க-கணித்திலம் - எண்ணினேமெல்லோம், பாடு - கேடுகள், கணித்து-மதித்து, இலம்பாடு-வறுமை, அடாநிற்றல்-போராடல், மணிகள் - பலமணி, நித்திலம் - முத்து, பாடு-படுதல், பலகணி-சாளரம், அத்து-சாரியை, இலம்-இல்லம், வீடுகள், பாடு-பெருமை.

நாட்டணி கூறி நணிபுகழ் தலைமைச்
சூட்டணி குருவின் றொன்மை யுரைத்தது.

கரும்புங் கமலமுந் தந்தமுந் தேமையர்
கைநிறைக்குங்
கரும்புங் கமலமுந் தங்கண் ணுழத்தியர்
கார்குழற்க
கரும்புங் கமலமுந் தம்பணை நாகையர்
காஜிகுலூர்
கரும்புங் கமலமுந் தல்விகச் சூடினர்
கைப்பிள்ளையே

என்பது-கரும்பின்முத்துந் தாமரையின் முத்து மெளியவர்கள் கைநிறையக் கொடுக்குங் கரியவம் பிற்கு அச்சமேற அழகிய கண்ணுடைய உழத்திய ரது கார்போன்ற கூந்தன்மணத்திற்கு அகருமுயர்ந் தல்ல மேகம் முந்த வரிசிக்கும் பண்ணையுடைய நாகூரி னுயகரானவர் ஹாஜி குலுருசாகிபவர்க ளுடைய பெருமையுள்ள பரிவட்டத்தை மும்மலத்தா லுயருமிருள் நீங்கச் சூடின முகம்மதுகருதுகுவா லேறு சாகிபுடைய கையைப்பற்றித் தொடந்த பிள் ளையா மென்றவாறு.—நாயகர்-எழுவாய், பிள்ளை-பயனிலை, கரும்பு-கன்னல், கமலம்-தாமரை, கரும்-கருமை, புங்கம்-அம்பு, அலம்-அச்சம், உந்தல்-எறு தல், அம்-அழகு, அருகு-அகில், புங்கம்-உயர்ச்சி, அல்-அல்ல, முந்தல்-முற்படல், அம்-மேகம், கரும்-பெருமை, புங்கம்-சீலை, மலம்-மும்மலம், உந்தல்-உயர்தல், அல்-இருள், இக-நீங்க. (72)

துயர்பல நீக்கித் தொல்லை வடிவின்
நயனருள் சஞ்சீவி நாகைமதி யென்றது.

கைப்பிள்ளை யாகத் தரும்புனல் வைப்பிற்
கவலையுந்தி

கைப்பிளை யாகத் தரும்பா துவன்மை
கனமெழின
கைப்பிளை யாகத் தரும்பைஞ் சஞ்சீவி
கருத்துணர்மி
கைப்பிளை யாகத் தரும்பணி நாகைக்
கலாமதியே.

என்பது-கைப்புக்குறையா தொலிக்கும் அரிய நீர் சூழ்ந்த உலகில் துயரமும் திகைப்பும், இரங்கலும், உடலிடத்து உண்டாகாது வலியும் சீர்மையும் அழகும், ஒளிவும் இளமையும் உண்டாகக் கொடுக்கும் பசியசஞ்சீவி மருந்தானது கருத்தின் உள்ளுணர்வின் மேன்மையாகிய காவலின் யாகத்தை யுடையவரும் பணியும் நாகூரில்வாழுங் கலந்தமதியா மென்ற வாறு.—மதி-எழுவாயுஞ், சஞ்சீவி-பயனிலையுமாகவுங் கொள்க. கைப்பு-உவர், இளையா-குறையாது, தத்துதல்-கூப்பிடுதல், அரும்-அரிய, திகைப்பு-மயக்கம், இளைதல்-இரங்கல், ஆகம்-உடல், அரும்புதல்-உண்டாதல், வன்மை-வலி, கனம்-சீர்மை, நகைப்பு-ஒளிவு, இளை-இளமை, ஆக-உண்டாக, தரும-கொடுக்கும், மிகைப்பு-மேன்மை, இளை-காவல், யாகத்தர்-வேள்வி யுடையவர், கலாமதி-கலந்தமதி. (73)

தீவினை யிருளறச் செழுங்கதிர் விரிக்கும்
மாவினை விளக்கு மதியென் றுவமித்தது.

கலாமதி காரம் பொறாமை விரோதங் களவுநயங்
கலாமதி காராமை யாவினை யாவுங் கரந்திடப்பு
கலாமதி கார மணிவிளக் காங்கலைக் கானமத
கலாமதி காரம் பொழிலணி நாகைக் கதிக்கரசே.

என்பது-சினமுந் தன்னைமதிப்பும், அகங்காரமும், அழுக்காறும் பகையுங், களவும், நயஞ்சேராத புத்தியும், தீவினைகள் யாவும் ஆகிய இருள் அமையாது மறைந்துபோகத் தான்வந்து புகுதலாகிய அதிகாரம் பெற்ற மணிவிளக்குமாகும், அன்றியுமறிவாகிய அறுபத்தினன்கு கலைகளையுடைத்தாய் அகலாது தன்னிலேயே நிற்குஞ் சந்திரனுமாகும், மேகத்தா லழகிய சோலையணிந்த நாகூரென்னுஞ் சொர்க்கத்திற்கு அரசரானவரென்றவாறு.—ஆமென்பதனை நடுநிலைத் தீபமாகக் கொள்க. சந்திரன்போன்ற அரசரென உவமையுருபுவிரிக்கவுமாம். கலாம் - சினம், மதி - தன்னை மதிப்பு, காரம் - அகங்காரம், பொறாமை - அழுக்காறு, விரோதம்-பகை, கலா-கலவாத, மதி-புத்தி, கார்-இருள், அமையா - பொருந்தா, வினை-

தீவினை, புகல்-புகுதல், ஆம்-ஆகிய, அதிகாரம்-அதிகரித்தல், அகலா-அகலாது, மதி-சந்திரன், கார் - மேகம், அம்-அழகு, கதி-சொர்க்கம். (74)

கற்றோ ருளத்துங் காசினி நாகையும்
உற்றோ ரறிவி னுயர்கட லென்றது.

கதிக்குந் திருவினை யுள்ளாரெளியர் கலாரென்றசங்
கதிக்குந் திருவினை யப்படி செய்தவ காக்கும்பர
கதிக்குந் திருவினை யோருணர் வாளர் கருத்துமுல
கதிக்குந் திருவினை நாகையுமோங்குங் கலைக்கடலே.

என்பது-பொங்கப் படாநின்ற செல்வத்தினை யுள்ளவரும், எளியவருங் கலத்தல் செய்யாரென்று சொன்ன சங்கதிக்கு, உங்களழகிய கருத்தின்படியே செய்தவரே, இரட்சிக்கும் பரகதிக்கேறும் பெருமையுள்ள செய்கைகளை யோர்ந்தறியும் உணர்வுடையவர் கருத்தினிடத்தும் உலகத்தின் றிசைகளிடத்தும் நிதிமகளின் அழகுடைய நாகூரினிடத்தும் ஓங்காநிற்கும் அறிவால்நிறைந்த கடலே யென்றவாறு.—கடலாகிய நாயகரெனக்கொள்க. கதித்தல்-பொங்கல், திரு - செல்வம், இன் ஐ - இடைச்சொல், சங்கதி - செய்தி, கு-உருபு, உம்-உங்கள், திரு-அழகு, வினை

யம்-கருத்து, பரகதிக்கு-வீட்டின் பேறுக்கு, உந்தல்-ஏறுதல், இரு-பெருமை, வினை-செய்கை, ஓர்தல்-ஆராய்தல், உலகம் - பூமி, திக்கு-திசை, திரு-நிதி மகள், இன்-சாரியை, ஐ-அழகு. (75)

இபுலீ சவாப்பெண் ணில்வுல கிவற்றிற்
கபய நுந்தா ளடைந்தே னென்றது.

கலைக்க வருந்தகை கேடனு முள்ளக்
கருத்தும்பொன்மே
கலைக்க வருந்தகை மாதரும் பூதவி
கற்பத்தினி
கலைக்க வருந்தகை யப்புகுந் தேன்கதிர்
மாடநிறம்
கலைக்க வருந்தகை நாகைமன் னுநுந்தங்
காலிடத்தே.

என்பது-கலைத்தலைச் செய்யவருங் குணக்கேட்டை யுடையவனும் உள்ளத்தின் எழும் நினைவுகளும் பொன் னிழையார் செய்த மேகலாபரணத்தைப் புனையும் அரியவழகுடைய மடவாரும், பஞ்ச பூதங் களின் வேற்றுமையா லுண்டாகும் பகையுடைய

ஐந்து பிரிவும் தடைசெய்ய அதனல் நானடைக்கல மாகப் புகுந்தேன் பிரபையையுடைய மாளிகைகளின் ஒளிவு சந்திரகலைகளை யெடுத்துக் கொள்ளும் பெரு மையுள்ள நாகூரிணுயகரே, உங்கள் பாதத்திடத்தே யென்றவாறு.—பகைப் பிரி வைந்தர்வன. கொலை, பொய், களவு, கள்ளுண்ணல், குருநிந்தை ஆகிய பாதகமென் றுணர்க. கலைக்க-அலைத்துவிட, வரும்-வருகிற, தகை-குணம், மேகலை-மேகலை, மேகலாபர ணம், கவ்வல்-பற்றல், அரும்-அரிய, தகை-அழகு, இகல்-பகை, ஐ-ஐந்து, கவர்-பிரிவு, தகைத்தல்-தடை படுத்தல், நிறம்-ஒளிவு, கலை-சந்திரகலை, கவர்தல்-வாருதல், பெருமை. (76)

எழிறருங் காவ விறைசொல் லுள்ளார்
கழிதர மொழியார் கனவினு மென்றது.

காலு முளரியம் பார்புனல் விண்ணுங்
கலப்புடறீக்
காலு முளரியம் பாழ்ங்குழி சேர்கலர்
காநறைவாய்க்
காலு முளரியம் பார்வய ணுகைக்
கருத்தர்சொல்லைக்

காலு முளரியம் பார்முறை பேதங்
கனவினுமே.

என்பது-வாயுவுந் தேயுவும் அழகிய பிருதிவியும் அப்பும் ஆகாயமுங் கலத்தலையுடைய உடலானது நெருப்பினை யுமிழும் விறகாலாகிய பாழ்ங்குழியிற் சேராதவர்களாம் பூங்காவிலொழுகுந்தேன்கள் வாய்க்காலிடத்துந் தடாகத்தும் நிறையும் வயல்களையுடைய நாகூரினையாளு நாயகர்சொல்லினை யெக்காலமும் உள்ளத்திலுடையவர். இன்னும் அவர்கள் மொழியாதவர்களாம். முறைபேதமாகிய வார்த்தைகள் கனவினிடத்து மென்றவாறு.—உள்ளார்-எழுவாய். சேர்கலர் மொழியார் என்பன பயனிலை. கால்-வாய்வு, முளரி-தேயுவு, அம்-அழகு, பார்-பிருதிவி, காலும்-உமிழும், முளரி-விறகு, அம்-சாரியை, வாய்க்கால்-நீரோடுங்கால், உம்-இடைச்சொல், முளரி-தாமரை, அம்பு-நீர்த்தடாகம், ஆர்தல்-நிறைதல், எக்காலும்-எல்லாப்பொழுதும், உளர் - உள்ளத்தி லுடையவர், இயம்பார்-சொல்லார். (77)

இத்தகைச் சிறைநீத் தெளியனை நந்தாள்
உத்தமக் காப்பி னுய்த்தி ரென்றது.

கனவிலங் காவல வாச்சிறை மேலெண்ணங்
கண்டனைமிக்
கனவிலங் காவலங் கோட்டைத் துயரங்
கடத்திநந்தாட்
கனவிலங் காவ லகத்தாக்கி யாளிர்
கனியும்புள்ளும்
கனவிலங் காவலங் கொட்டுந்தண் ணுகைக்
கதிர்விளக்கே.

என்பது-ஆவலாகிய கனத்தவிலங்கும் எப்பொருளினும் பேராசையாகிய சிறையும் மேலெண்ணமாகிய தண்டனையும் மேலிட்டிருந்தன துயரமாகிய நீங்காதவலியுடைய கோட்டையில் ஆதலால். அதனையொதுக்கி உங்கள் பாதமாகிய சீர்மையுள்ள வீட்டிற் பாதுகாவலிடத்தில் இவ்வடிமையை அமைத் தாள்வீராக, கனிந்த வுள்ளத்தையுடைய புட்களுங் கூட்டமாகிய விலங்கினங்களும் வாயினுர்த்தாடா நிற்குங் குளிர்ந்த நாகூரினிலங்கு கலையுடைய, தீபமே யென்றவாறு.—கனம்-பாரம், விலங்கு-தளை, ஆவல்-ஆசை, அவா-ஆசைப்பெருக்கம், மிக்கன-மேலிட்டிருந்தன, விலங்கா-நீங்காத, வலம்-வலி. கனம்-சீர்மை, இலம்-

இல்லம் வீடு, காவல்-பாதுகாத்தல், அகம்-இடம், கனம்-கூட்டம், விலங்கு-மிருகங்கள், ஆவலங்கொட்டல்-வாயாலார்த்து ஆடல். (78)

சித்தியில் லாதவென் சிந்தை யிடத்தினும்
மித்திரன் போலருள் வித்திரென் றிரந்தது.

விளக்கந் தரத்தரத் தேருது சிந்தை
மிகவெருவி
விளக்கந் தரத்தரத் தோலுண் கனியின்
வெறியமலர்
விளக்கந் தரத்தரத் தார்பொழி ளுகைய
வேண்டினனும்
விளக்கந் தரத்தரத் தாதவன் போலருள்
வித்திடலே.

என்பது - விளங்குதலைக் கொடுக்கக் கொடுக்கத் தேருமல் மிகவும் அச்சப்பட்டுக் குகையுடைய மலையையொத்த யானையுண்ட விளங்கனியைப் போல வெறிதாகிய சிந்தையிடத்தில் கோட்டிலுள்ள பூக்கள் விரிந்து மலர்தர மேகக்கூட்டத்தில் அளாவுஞ் சோலையுடைய நாகூரிஞயகரே நானிரவாநின்றேன்

அந்தரத்து விளக்காகிய செவந்த சூரியனைப்போல வெங்குந்தோற்ற உங்கள் கிருபையை விதைத்திடற் கென்றவாறு.—ஆதவன் விதைத்திடல்போல விதைத்திடற் கெனக்கொள்க. விதைத்திடல் ஒளியினை, யுண்டாக்கல் - விளக்கம், தெளிவு, தர-கொடுக்க, விளவு-விளாமரம், கந்தரம்-மலைக்குகை, தரம்-மலை, தோல்யானைவிள, விள்ள-மலர, கந்தரம் - மேகம், தரம்-கூட்டம், ஆர்தல்-தங்கல், அளாவல்-விளக்கு சுடர், அந்தரம் - ஆகாயம், அரத்து - அரத்தம் செவப்பு. (79)

நாகை விளங்க நண்ணின ரின்பப்
பாகினி தருள்வான் பாடின னென்றது.

வித்தார மான நிறைதேன் றவழ்ந்தபொன்
மெய்விளைகு
வித்தார மான முடனார் செய்நாகை
விளங்கவுற்ப
வித்தார மான வருள்சுக மேதர
விச்சித்திர
வித்தார மான கவிமாலை சூட்டினன்
வேண்டிக்கொண்டே

என்பது - வித்துக்களுண்ண நிறையும் பெருமை யுள்ள தேனிற்றவழ்ந்த பொன்னிறம்போல் மேனி யுடைய வலம்புரிச் சங்குகள் முத்துகளைக் குவித்து வலியுடன் தங்காநிற்கும் வயலுடைய நாகூர்விளக் கங்கொள்ள உண்டாயினர். அளவில்லாத கிருபை யினது சுகத்தைக் கொடுப்பதற்கு விச்சித்திர வித் தாரமாகிய அந்தாதி யென்னும் பாமாலை நான்சூட் டினே னிரந்து கொண்டென்றவாறு.—உண்டாயி னருக்குச் சூட்டினே னென்றும், சுகத்தையெனக் குக் கொடுப்பதற்கென்றுங் கொள்க. வித்து-விதை, ஆர-உண்ண, மானம்-பெருமை, குவித்து-கூட்டி, ஆரம்-முத்து, மானம்-வலி, ஆர்தல்-தங்கல், செய்-வயல், உற்பவித்தார்-உண்டாயினர், அவமானம்-அளவின்மை, அருள்-கிருபை, வித்தாரம்-விரிவு, ஆன-ஆகிய. (80)

பசப்புறு கோலம் பார்த்திவ ராலென்
றிசைத்தயர் கிற்பா ளேந்திழை யென்றது.

கொண்டற் களிக்குங் கடற்கு மதிக்குங்
குயிற்குமடர்

கொண்டற் களிக்கு மலர்க்கு மலர்க்குங்
குழற்குந்திகை
கொண்டற் களிக்கு மயர்வாள் பசலைக்
குணம்பல்வுங்
கொண்டற் களிக்குந் திருநாகை யார்செய்த
கோலமென்றே.

என்பது-மேகத்திற்குப் புனலைக் கொடுக்குங் கடலினுக்குஞ், சந்திரனுக்குங், குயில்களுக்கும், பொருதுங் கீழ்நாற்றினுக்கும், வண்டுகளுக்கும், மலர்களுக்கும், அலர்தூற்றலுக்கும், ஆயரது குழலோசைக்கும், இரவினது செருகலுக்குந், திகைப்பினுலயர்ச்சி கொள்வாள் ஆசையிலெழுந்த துன்பத்தால் நிறம்பேதித்துப் பலகுணங் கொண்டதை என்னுள்ள மகிழுஞ்செல்வ நாகூரினுயகர் செய்த வொப்பனை யென்றுசொல்லி யென்றவாறு.—ஒப்பனை யென்றுசொல்லி அயர்ச்சிகொள்வா ளெனக் கூட்டுக திகைகொண்டு என்பதை, திகைப்பனுலெனச் சொல்லுருபாகக் கொள்க.-கொண்டல்-மேகம், அளித்தல்-கொடுத்தல், கொண்டல்-கீழ்காற்று, அளி-வண்டு, திகை-திகைப்பு கொண்டு, ஆல்-என்னு மூன்ற

முருபு, அல்-இரவு, கரு-செருக்கு, கொண்டல்-கொள்ளல், களி-களிப்பு. (81)

அறிவுளங் கலங்கு மந்தகர் தமக்கோர்
நெறிதரு மூன்றுக்கோ னீர்மையி ரென்றது.

கோலந் தகரங் கடுக்குங்கண் மாதர்கொங்
காசலத்தின்
கோலந் தகரங் கலைக்கடல் பங்குற்றுக்
கொள்வழிக்கில்
கோலந் தரகங் கனையர் தயாளநற்
குங்குமந்தக்
கோலந் தகரங் கமழ்பொழி ணுகையங்
கோக்களிறே.

என்பது-அம்பும், அழகிய அகங்கையு நிகர்க்குங் கண்ணையுடைய மாதர்களின் கொங்கையாகிய மலையினது கோலங்கள் தகர்க்கும் அழகிய அறிவாகிய கடல் கலங்கிச் சேருடி அவ்விடத்தில் தமக்குரிய வழியிற் செல்லுகைக்கு ஊன்றுகோ லில்லாத குருடரையொத்த அவருக்கு வழிகொண்டு செல்லும் அறிவாகிய ஊற்றுக்கோல் அருளும் தயவுள்

ளவரே, நல்ல குங்குமமுந், தக்கோலமும், பலம ணப்பண்டங்களும், பரிமளிக்கும் பொழிலையுடைய நாகூரில் வாழும் அரசரைப்போல அன்புடைய நாயகமே யென்றவாறு.—இஃதிருவகப்பயன். கோல்-அம்பு, அந்தம்-அழகு, கரம்-கை, கோலம்-பல கோலம், தகர்-தகர்த்தல், அம்-அழகு, கலை-கல்வி, கோல்-ஊன்றுகோல், அந்தகர்-குருடர், அங்கு-அவ் விடத்தில், தக்கோலம்-பஞ்சவாசத்தி லொன்று, தக ரம்-மணப்பண்டம், வேர்-வித்துமுதலாயின. (82)

ஓங்குமெண் டிசைமா லூக்கிய கொற்றவ
தாங்குறுங் கையாற் றமியனை யென்றது.

கோக்குஞ் சரமணிப் பூண்டகை யாட்குக்
குழந்தையுமக்
கோக்குஞ் சரமணி யாக்கையு மீந்துயர்
கொற்றமெட்டுக்
கோக்குஞ் சரமணி நாகைமன் னுதுயர்
கொண்டுழலிக்
கோக்குஞ் சரமணிக் கையா லெடுத்துக்
கொளக்கடனே.

என்பது-கோக்கு மணிகளினது மாலைகளைப் பூணுந் தகையுள்ளவளுக்குக் குழந்தையும், அவளது புருடனாகிய அரசனுக்குஞ் சுவாசமியங்கு முட்டிலினை யும் அருளி, உயரும் வெற்றியை யெட்டுத் திசைகளின் யானைகளையும் அலங்கரித்த நாகூரின் மன்னவரே, துயரத்தாலுழன்று திரியும் இந்த ஆண்மகனை நடையுள பொருள்களுக்கு ஆபரணமாகிய உங்கள் கையினு லெடுத்துக் காத்துக்கொள்ளுதல் கடனு மென்றவாறு.—இக்கோர்க்கு, இக்கோவையென நான்காவது மிரண்டாவது மயங்கிற்று. கோக்கும்-கோவை செய்யும், சரம்-மாலை, மணி-நவமணி, கோ-அரசன், சரம்-கொறுக்கை, அணிதல்-பூணல், கோ-திசை, குஞ்சரம்-யானை, அணிதல்-அலங்கரித்தல், கோ-ஆண்மகன், சரம்-நடையுள பொருள், அணி-ஆபரணம். (83)

ஆக்கைக் கிழிகுண மகற்றி நன்மையின்
ஊக்கம் புரிய வுதவிசெய் கென்றது.

கடனிறை வேழந் தருகிதிச் செல்வர்
கடிகமழ்பூங்

கடனிறை வேழந் தடம்பொழி னாகைய
காத்தருளிர்
கடனிறை வேழந் தவமுடல் வாய்மை
கமைதயைசீர்
கடனிறை வேழந் தருமங்கள் பூண்டு
களிப்புறவே.

என்பது-மதங்களை யிறைக்கும் யானைகளைக் கொடையாகக் கொடுக்கு நிதிகளையுடைய செல்வரும், வாசனை பரிமளிக்கும் பூந்தோட்டமும், நிறைந்த கருப்பந் தோப்பும், பெருமையுள்ள நாடுமுடைய நாகூரி னுபகரே, கருணையாற் காக்கக் கடவீராக, சுவாசந் தவமு முடலானது இறைவனது கடனும், வாய்மையும், பொறுமையும், தயவும், புகழும், நீதியும், மாட்சிமையுமாகிய வேழனையும், அழகிய நன்மைகளையும் பூண்டு களிப்புறுதற் பொருட் டென்றவாறு.—கடம்-கடன் மதம், இறை - இறைத்தல், வேழம்-யானை, கடம் கடன்-தோட்டம், நிறை-நிறைதல், வேழம்-கரும்பு, கடன்-முடியிறை, இறை எப்பொருட்கு மிறைவன் இறைவனது கடன் தொழுகை முதலாயின, வேழம்-சுவாசம், கடம்-கடன் நீதி, நிறை-மாட்சிமை, எழ்-எண், அம்-அழகு. (84)

அண்ண லணிகழ லரவிந்தம் பூத்தற்கென்
கண்ணுங் கருத்துங் கணியிட னென்றது.

களிப்புண் டரீக மலம்வரும் வேலர் கய றடிமான்
களிப்புண் டரீக மலர்புக ழார்வழி கான்கெழுதீங்
களிப்புண் டரீக மலர்வன நர்கையர் காலிணையாங்
களிப்புண்டரீக மலர்வதென் கண்ணுங் கருத்தினுமே

என்பது-செருக்குங் கழுகுகள் சுழன்றுவரும் வேலாயுதத்தை யுடையவரும், கயன் மீனும், உடும்பும், மானும், உள்ளுழற்சியுடைய புலியும், உள்ளம் விரியும் புகழினை யுடையவரும் ஆகிய, நபிநாயகத்தின் மரபில் வந்த நறுநாற்றம் பொங்கு மினித்த தேனுண்ணும் வண்டார்த்த பூவனத்தையுடைய நாகூரி னுயகரது காலிணையாகிய வின்பத் தாமரை மலர்வது என் கண்களினிடத்துங், கருத்தினிடத்துமே யென்றவாறு.—கண்ணும் உள்ளமுங் குளிர்ச்சி யாற் றடாகமென்க. வருவித்தவந்தவெனும் பெயரெச்சம் நாயகரெனும் பெயரைக் கொண்டது. களி-செருக்கு, புண்டரீகம்-கழுகு, அலம்-சுழலல், களி-உன்மத்தம்-உள்ளுழற்சி, புண்டரீகம்-புலி, அலர்தல்-

விரிதல், களி-கள், புண்டரீகம்-வண்டு, மலர்-பூ, களி-இன்பம், புண்டரீகம்-தாமரை, மலர்தல்-பூத்தல். (85)

காரணர் மரபார் கண்ணேக் குறுமேல்
சீரணம் பிணிபல செல்லு மென்றது.

கருத்துவக் குங்கடி யாம்வினை யன்று
கனவெனவெக்
கருத்துவக் குங்கடி யாகச்செய் தார்வழி
க்ார்புகைய
கருத்துவக் குங்கடி யார்மனை நாகையர்
கண்ணுறிற்பு
கருத்துவக் குங்கடி யாதனை யுஞ்செல்லுங்
கைகண்டதே.

என்பது-கரு ஆரம்பிக்கும்போது ஆகும் விதிப் பயனை அன்று கனவாக எக்கருத்து மகிழும் புதுமை யாகச் செய்தவராகிய முகியித்தீ னண்டவரவர்கள் மரபின் வந்த மேகமும், அகிலது புகையுங் கட்டுண் ணும் கலியாண நிறைந்த மனைகளையுடைய நாகூரி னயகரது கண்களின் கடைக்கணித்தல் ஒருவனுக்கு எய்துமாகில், அவனது புகர்படர்ந்த மேனியாகிய கருங்குட்டமுங், கடியால் வரும் வருத்தமாகிய பல

குட்டரோகங்களுஞ் சென்றொழியும், இப்பயன் கை கண்டதென்றவாறு.—கடி-அச்சமாக்கி, அச்சமுள்ள வியாதிகளும் போமெனக் கொள்க, கரு-கருப்பம், துவக்கும்-ஆரம்பிக்கும், கடி-பொழுது, ஆம்-ஆகும், வினை-விதி, எக்கருத்து-எல்லாக்கருத்து, உவக்கும்-மகிழும், கடி-புதுமை, அகரு-அகில், துவக்கல்-கட்டல், கடி-புதுமணம், ஆர்தல்-நிறைதல், புகர்-குற்றம், துவக்கு - உடல், உம் - எண், கடி - விஷகடி, யாதனை-துன்பம். (86)

பல்பிணி கண்டித்துப் பண்பின தாக்கை
நல்குதிர் கொடையி னுயக வென்றது.

கண்டங்கந் தான விடத்து மற்றுள்ள
கடும்பிணியுங்
கண்டங்கந் தான வியல்போ டருளிர்
கபாடநிலைக்
கண்டங்கந் தான விராலய நாகையிற்
கற்றவர்சொற்
கண்டங்கந் தான வியந்திகழ் சீர்புனை
காரணரே.

என்பது-கழுத்தும் மூட்டுகளும் ஆகிய விடத்தினு மற்றிடத்தினும், உள்ள கடிய பிணிகளையுங், கண்டு நீக்கிச் சடலத்தைக் கொடைப்பயனாக அருளிச் செய்வீராக. கதவிடத்தும், அதனிலையிடத்தும், தங்கந்தான் பிரகாசிக்கு மனையுடைய நாகூரில் அறிவாளர் சொல்லாகிய கண்ட சருக்கரையானது கெடாத புதுமை யொளிசெயும் புகழினைப் புனைதற்குக் காரணத்தை யுடையவரே யென்றவாறு.—நாகூரி லிக்காரணத்தோடும் வாழ்பவரெனக் கொள்க, கண்டம் - கழுத்து, கந்து - யாக்கையின் மூட்டு, ஆன - ஆகிய, கண்டு-கண்டு, கண்டித்து, அங்கம்-சடலம், தானங்-கொடை, கண் - இடம், தங்கம்-செம்பொன், தான் - ஆசைச்சொல், அவிர்தல்-பிரகாசித்தல், கண்டம்-கண்டசருக்கரை, கந்தா-கெடாத, நவியம்-புதுமை. (87)

குரிசில் மணத்தால் குளிர்ந்துளம் விகாரப்
பொருள்பல வொழுகிப் புகழுமென்றது

காரணங் காட்டுக் குபிரர்பொற் றேர்செலக்
கற்பித்துமுற்

காரணங் காட்டுக் குரிசினன் ஞைகையார்
கான்கலந்தால்
காரணங் காட்டுக் குயிலு மளியுந்தென்
காலுமன்றிக்
காரணங் காட்டுக் குணமு மனமுங்கை
வாரத்தமே.

என்பது-இருளாகிய பேயாட்டலையுடைய காபிர்க ளது பொன்னினலாய தேரினை நடக்கக் கற்பித்து முந்திய காரணத்தினைக் காட்டுங் குரிசிலாகிய நல்ல நாகூரி ஞயகர், அவரது வாடை கலக்குமாகில் காரிய அண்ணத்தையுடைய காட்டிலுள்ள குயில்க ளும், வண்டினங்களுந், தென்றற் காற்று மல்லா மல், கார்காலத்திற் றேன்றும் அச்சத்தின் ஆட் சிக் குணங்களும், பலமனங்களும், வாழ்த்து மிடத் தன வென்றவாறு.—கார்காலமெனவே மற்றவை வேனிலிடத்தன இவ்விரு பருவமுங்கூறவே பருவ மெல்லாமென்ன விடைப்பட்டு நின்றது. கார்-இருள், அணங்கு, கொலை, ஆட்டு-ஆட்டல் பேயாட்டு, கார ணம்-காரணீகம், காட்டல் - காண்பித்தல், கார் - கருமை, அணம்-மேல்வாய், காடு-சோலை, கார்-கார் காலம், அணங்கு-அச்சம் ஆள்து ஆட்டு-ஆட்சி. (83)

துயர்தருந் துன்பச் சூளையர் ஞாங்கர்
மயலனு காது மறுத்தியென் றுரைத்தது.

வாரத் தனமட வாவிய போன்ற
 வரிவிழிபொன்
வாரத் தனமட வார்மயல் வேண்டுங்கொல்
 வாண்மதியால்
வாரத் தனமட வாவியந் தண்வயல்
 மாமணியும்
வாரத் தனமட வாவரு ணாகைவண்
 டார்வள்ளலே.

என்பது-பிறர்க்குத் தன்னால் அமடுவர ஆசித்த போன்ற வரிபடர்ந்த விழியும், பொன்னூலாற் செய்த கச்சணிந்த முலையும் உடைய மடவார்களால் வருமயக்கத்தை விரும்புவதோ, அல்ல ஒளிவுடைய மதியினால் அலைமேலன்னஞ் சேவலோ டோடாநிற்கத் தடாகத்தில் அழகிய குளிர்ந்த வயலானது மகிமையுள நென்முத்தும் அன்புடைய பொன்னையும் அடவாகப் பருவங்கடோறுங் கொடுக்கு நாகூரில் வாழும் வண்ணமாலை புனையும் வள்ளலே யென்றவாறு.—அவாவித்தல் போன்றவரியென்க. வார-வர, தன்-

தன்னால், அமடு-கலகம், அவாவல்-ஆசித்தல், வார்-கச்சு, அ-சாரியை, மடவார்-பெண்கள், வாரம்-அலை அத்துசாரியை, அன்னம் - அட-ஊடல் கொள்ள, வாரம்-அன்பு, தனம்-பொன், அடவா-ஒழுங்காக.

வள்ள லமுத வசனத் துலகத்
துள்ள பொருடிரு வொருங்கெய்து மென்றது.

வண்டா ரமரத் தவம்பகத் தார்முக
மானும்வெள்ளை
வண்டா ரமரத் தவம்புய நீர்மர
வம்மகில்மொய்
வண்டா ரமரத் தவம்பொழில் நாகையர்
வாயமுதால்
வண்டா ரமரத் தவம்புவிச் செல்வமும்
வாய்ப்பதுவே.

என்பது - பேராடும் அம்பும், அகங்கையும் போன்ற கண்களையுடைய மடவாரது முகங்களை நிகர்க்கும் வெள்ளைச் சங்கினது முத்துகளையுடைய செவந்த தாமரை மலர்கள் பூத்தகுளமும், குங்குமம் அகில் வண்டு மொய்க்குஞ் சந்தனமரங்களையுடைய அழகிய சோலையும் உள்ள நாகூரினுபகாரது வாயி

னமுதங்கிடைத்தால் வண்மையுள்ள அரும்பண்டமும் பொன்னினது செல்வமும் அழகிய பூமியினது செல்வமும் கிடைப்பதற்குச் சந்தேகமில்லை யென்றவாறு.—வண்டு-அம்பு, ஆர்-தரிபடல், அமர்-போர், அத்தம்-கை, அகம்பகம்-கண், வண்டு-சங்கு, ஆரம்-முத்து, அரத்தம்-செவப்பு, வண்டு-அளி, ஆரம்-சந்தனமரம், மரத்த-மரங்களையுடைய, வண்-வண்மை, தாரம்-அரும் பண்டம், அரத்தம்-பொன். (90)

சில்வினைத் தொழில்கட் சீத்தொரு மைப்பால்
நல்வினைத் தருமிறை நனிமொழி யென்றது.

வாய்ப்புள கத்தர் கணிதர் சாத்தர்
வலியுடற்பேய்
வாய்ப்புள கத்தர் கரும மகற்றி
மறைப்பொருளின்
வாய்ப்புள கத்தர் கனங்குணந் தந்தது
வல்லவன்றன்
வாய்ப்புள கத்தர் கதிநாகை யாரிசை
வாக்கணியே.

என்பது-நிமித்தகத்தின்கண் பற்றுளருங் கணிதருஞ் சரத்தொழிலாரும், வல்லுடலின் பசாசுகள்

வசப்படுத்திய கருத்தருஞ் செய்யுங் கருமத்தின் விகற்பங்களை மனத்திலேறுதொதுக்கிவித்து ஓதுந் தோறு மறைப்பயன திடத்திற்புளகிதங் கொள்வாரது கனதியுங், குணமுந் தருவது எல்லாம் வல்ல கடவுளினது வளமையாகிய உபகாரம் உள்ளகத்தி லுள்ளவர் வாழுஞ் சுவர்க்கமாகிய நாகூரிணுயகரது புகழும் நாவின் அலங்காரமே யென்றவாறு.—அலங் காரம் எழுவாயுந், தந்தது பயனிலையுமாகக் கொள்க. இறந்தகால முக்காலமுங் கொள்ளுமென் றறிக, வாய்ப்புள-நிமித்தம், அகம்-இடம், வாய்ப்பு-வசப் படல், உள-உடைய, கத்தர்-கருத்தரானவர், வாய்-ஏழாமுருபு, புளகம்-மயிர் சிலிர்த்தல், அத்து-சாரி யை, அர்-விகுதி, வாய்ப்பு-வளமை உபகாரம், உள் ளகம்-சிந்தையி னுள்ளிடம். (91)

நன்னய நாகை நாயக ருவகை
இன்னன பொருளி னியல்பின தென்றது.

வாக்கணி யாதவ ணுிதி யாமதி
யாம்புகழ்மூ
வாக்கணி யாதவ ணுமமு தாமருக்
தாமகிலு

வாக்கணி யாதவ நாகத்தின் வாசர்
மனத்திலுன்ன
வாக்கணி யாதவ நாகைய ரோகை
மகரந்தமே.

என்பது-அழகிய சூரியனைப்போல வெங்குஞ் சிறந்த வாக்குமாகும், இருநிதியுமாகும், புத்தியுமாகும், புகழ்கெடா தளவிடாத தவமுமாகும், அமுதமுமாகும் மருந்துமாகும் அகில் உவா வேங்கை ஆச்சா மரங்கள் மிகுந்தமலைகளில் வாசஞ் செய்பவர் ஆகிய விருடியர்மனங்களி னினைக்கும் ஆசையாகிய பொருள்களுக்குப் பலனில்லை யென்பது பூணாக நாகூரிணுபகரால் வரும் உவகையாகிய மதுபான மென்றவாறு.— அணியாதவன் வாக்காமென்று முதலிலும், அவம் அணியாதென்றீற்றிலுங் கொள்க. பயனில்லையென்பது பூணுதென்று அதனினத்தை மறுத்துப் பயனுளவென்பது பூண்டநாயகரென்றுகொள்க, வாக்கு-ஐம்பொறியிலொன்று, அணி-அழகு, ஆதவன்-சூரியன், மூவா-கெடாத, கணியா-அளவிடாத தவம், தவன்-தவசு, உவா-உவாயமரம், கணி-வேங்கைமரம், ஆ-ஆச்சாமரம், தவ-மிகுதி, அவா-ஆசை, கு-நான்காமுருபு, அணியாது-பூணுது, அவம்-பயனின்மை. ()

அரும்பொருள் கண்ட ஆண்டகை யடிமை
விரும்பத் துயர்தந்த விழுமமென் றென்றது.

மகரந்த வாசங் கலைகடற் றீவந்து
மானுறைவோர்
மகரந்த வாசங் கனம்பொருள் கண்டவர்
வண்பொழிற்பூ
மகரந்த வாசங் கமழ்நாகை யாரடி
மைத்துயர்விம்
மகரந்த வாசங் கதங்கொள லாங்கொலிவ்
வையகமே.

என்பது-சுறுமீன்களும், சங்குகளுங் கெடாத அலை கடல் சூழ்ந்த தீவாகிய அந்துமானையும் அதிலுறைபவரையும் அவர்கள் மக்களையும் அவரது கூட்டங்களையும் அவ்விடத்துண்டாகிய பல பொருள்களையும், இவ்விடத்திருந்தே கண்ணாற் கண்டவர், வளப்பமுள்ள தோப்புகளது பூந்தாதுடைய மணங்கள் பரிமளிக்கு நாகூரிறையகற்கு ஓரடிமை துயரந்தால் அழும் உம் அளவும், அவனது ஆசைப்பொருத்தம் தோற்றுது மறைந்து கொள்ளலுண்டோ, இவ்வையத்தார்

வழக்கத்திடத்தி லென்றவாறு.—ஒருவருஞ் சென்று கொள்ளக்கூடாத விடத்துப் பொருளெல்லாங் கண்டு கொள்ள வல்லவருக்கு மறைவில்லையென்று கொள்க. மகரம்-சுறு, தவா தெளவா-கெடாத, சங்கு-வளை, மகர்-மகார்,மக்கள்,அந்த-சுட்டு, வாசம்-இருப்பிடம், கனம்-கூட்டம், மகரந்தம்-பூந்தாது, வாசம்-மணம், விம்ம-அழ, கரந்து-மறைந்து, அவா-ஆசை, சங்கதம்-பொருத்தம். (93)

ஏழை துயர்தீர்ந் தேத்துதற் கென்றும்
வாழிநுஞ் சரண் வையகத் தென்றது.

வையகம் படருந் திருக்கன்னை கெற்பத்துள்
வாழ்பொழுதார்
வையகம் படருந் திருக்கரை வென்றவ்
வாழிசரண்
வையகம் படருந் திருக்கடர் நோயு
மறுத்துயர்செவ்
வையகம் படருந் திருக்கவு நாகைவந்
திக்கவுமே.

என்பது-கூறிய அம்பினை நெருக்குங் கண்ணை யுடைய தாயார் கெர்ப்பத்துள் வாழும் பொழுதில்

ஊருஞ் சிவிகையோடு படர்ந்த பகையரை வென்ற வரே உங்கள் சரணுகிய அடைக்கலப்பயன் வாழ்ந் திருக்கக் கடவது, பூலோகத்தில் வசையுங் குற்ற மும் பகையும் நோயும் நீக்கி யுயர்ந்த நேராகியவழி யேறி யிருக்கரும் நாகூரினை வாழ்த்தவும் என்ற வாறு.—வை-கூர்மை, அம்பு-கணை, அடர்தல்-நெருங் கல், திருக்கு-கண், வையம்-சிவிகை, படர்தல்-நடத் தல், திருக்கர் - வளைந்த பகையர், வையம் - பூமி, படர்-படர்சொல்லாகிய வசை, திருக்கு - குற்றம், அடர்-பகை, நோய்-துன்பம், செவ்வை - நேர்மை, அம்-சாரியை, படர்-வழி, உந்தல்-ஏறுதல், உந்தி யிருக்க-உந்திருக்க என விகாரமாயிற்று. (94)

இன்கனிந் தருள்கறும் மிரும்புயஞ் சிறக்கும்
பொன்குங் குமத்தொடை புலவற் கென்றது.

வந்திக் களிக்குங் குணமகப் பெற்றன
வாழிய நும்
வந்திக் களிக்குங் குமத்தொடை யீதிர்வண்
ணுகையின
வந்திக் களிக்குங் குலமன்னர் முன்னு
மருளுளத்தும்

வந்திக் களிக்குங் குளிர்மருந் தாற்றுமிவ்
வல்லமைத்தே.

என்பது-மலடி களிக்கத்தக்க குணத்தை யுடைய மகவைப் பெற்றதுபோல வாழ்வதாக. உங்களுடைய பிரபந்தி யானவனுக்கு வண்டு மொய்க்குங் குங்குமமாலை யருள்வீராக, அஃது வண்மையுள்ள நாகூரிடத்தி னுண்டாகும் புதுமைகளைத் திசைகடோறுங் குழுவுடைய அரசர்களிடத்து மருண்டவுள்ளத் திடத்தும் கொடுக்கும். அன்றியும் எய்தி என்னுடைய இந்த மயக்கத்திற்குக் குளிர்ந்த மருந்துஞ் செய்யு மித்தகை வல்லமை யுடைய தென்றவாறு.—வந்தி மலடிகளிற்றல் அகமகிழ்ச்சி. வந்தி-கவிஞன், கு-உருபு, அளி-வண்டு, குங்குமம்-மரவம், நவம்-புதுமை, திக்கு-திசைகள், அளித்தல்-கொடுத்தல், வந்து-எய்தி, இ-சுட்டு, களி-மயக்கம். (95)

பிணியிரு ளகற்றிப் பிரகா சிக்கும்
அணிவிளக் காதிர் நும் மருங்கவிக் கென்றது.

வல்லமை கும்ப வனமுலை மாதரு
மாற்றவினை

வல்லமை கும்ப வனக்கோவை பாண்டுமென்
  மூலமெனும்
வல்லமை கும்ப வனத்துழ லாது
  வழிவிளக்கின்
வல்லமை கும்ப வனநாகை யேத்தி
  வருங்கவிக்கே

என்பது-வட்டுப் போலு மழகிய குடம்போலும் வடிவாகிய முலையினை யுடைய மாதர் மய்க்கமும், மாறுபட்ட தொழிலின் வல்ல கருமங்களும், ஆகிய இருளானது கொதித்துநிற்ப நீர்க்கோவையும் பாண்டு மூலமுமென்னும் வலியுடைய மூங்கிற் கூட்டக் காட்டிடத் துழன்று திரியாமல் வழிபடும் விளக்குப் போல சீக்கிரத்தி னமைவீராக, உங்க ளரமனை யுடைய நாகூரினை யேத்திக்கொண்டு வரும் புலவ னுக் கென்றவாறு.—வல்லு-வட்டு, அமை-அம்மை, அழகு-கும்பம், குடம் வனம்-வடிவு, வல்ல-வல்ல கருமங்கள், மை-இருள், கும்ப-கொதிப்ப, வனம்-நீர், கோவை-கோத்தல், வல்-வன்மை, அமை-மூங்கில், கும்பல்-கூட்டம், வனம்-காடு, வல்-சீக்கிரம், அமைகு-அமைக, உம்-உங்கள், பவனம்-அரமனை.

நன்னபி யருணெறி நடப்பவிவ் வுடற்கும்
இன்னருள் காட்சி யெழிலுண வென்றது.

கவிக்கனம் பாநிழ லாமறை நேர்வழி
  கான்மதுவிக்
கவிக்கனம் பாணிழ லானூட்டி னரக்
  களியியல்பா
கவிக்கனம் பானிழ லார்கனி யாக்கைக்குங்
  காட்சியிந்தைக்
கவிக்கனம் பானிழ லார்மதி னைகைக்கல்
  வித்தருவே.

என்பது - கவிதலுடைய மேகத்தின் பரந்தநீழல் குடையாக உடையவர், வேதத்தி னேர்வழியாகிய மணமுள்ள மதுவினை விக்கிக்கொள்ள நம்மிடத்துக் கிருபையா லூட்டினர், அக்குடிப்பினது களியாட்டின் இயல்பா லுண்டாகக் கடவது, கரும்பின் சாறுஞ், சோறும், பாலுங்குளிர்ச்சிதங்கிய கனியுமாகிய என்னுடலுக்கு உங்களைக் காணுங்காட்சியானது சந்திரனைத் தொட்டு வெள்ளொளிவைக் குடித்து வட்டமாகிய மதில் சூழ்ந்த நாகூரில்வாழுங் கல்வியாகிய தருவே யென்றவாறு.—காட்சியெழுவாயும்

ஆகவென்னும் வியங்கோள் பயனிலையுமாக்கி, என்னுடலுக்கு இவ்வுணவாகிய காட்சியானது உண்டாகக் கடவதென முடிக்க, கவி-கவித்தல், கனம்-மேகம், பாவல்-பரவல், நிழல்-நீழல், விக்கல்-விக்குதல், நம்பால்-நம்மிடத்தில், நிழல்-கிருபை, இயல்பாக-இயல்பினுண்டாக, இக்கு-கரும்பு, அனம்-சோறு, பால்-பால், நிழல்-குளிர்ச்சி, ஆர்தல்-தங்கல், கவி-கௌவி தொட்டு, கனம்-வட்டம், பால்-வெண்மை, ஒளி-நிழல், ஆர்தல்-குடித்தல். (97)

கல்லொடு பகர்ந்த காரணக் குரிசில்சீர்
புல்லிய நுங்கழல் புகலிட மென்றது.

கல்வித்த வார்ண மாவலர் காணக் களியுரைபு
கல்வித்த வாரண மாவிழி நோயகல் வித்துடற்கி
கல்வித்த வாரண மாநிதி யெற்குங் கமழ்கழல்பு
கல்வித்த வாரண மாநாகைச் சாகுல் கமீதொலியே

என்பது - கல்லினாலாகிய வுருவத்தைப் பொன்னணிந்த யானை குதிரைகளின் வல்லாராகிய அரசர்கள் காணும்படி அகமகிழ்ச்சி கொள்ளுஞ் சொல்லாற் பேசச்செய்வித்தவரே, புண்ணுயழியு நோய்களை நீக்கிவித்து அவ்வுடலுக்கு வலியினை விதைத்த

பெரிய சங்கநிதியே ஆகையால் எனக்கு உங்கள் மணமுள்ள பாதமே தஞ்சம் ஞானக்கடலே, செல்வி வாழும் நாகூரையாளுஞ் சாகுல் கமீதென்னுங் காரணப் பெயருடைய வொலியே யென்றவாறு.— கழல்-எழுவாய், புகல்-பயனிலை, கல்-என்றது, கல்லாலாகிய வுருவிற்கு ஆகுபெயர், வித்தம் பொன், வாரணம்-யானை, மா-குதிரை, புகலல்-பேசல், ரணம்-புண், ஆ-ஆக, இகல்-வலி, வித்தல்-விதைத்தல், வாரணம்-கடல், மா-செல்வி. (98)

நங்நபி யானை நாயக நங்கையால்
என்முக நீவி யிரட்சிப்பீ ரென்றது.

கமீதுவை பூம்பது மென்றுணர் தற்கருங்
காரணர்ச
கமீதுவை பூம்பதத் தானையென் னேப்த்துயர்
கட்டறமு
கமீதுவை பூம்பதத் தண்கர மேநறை
கான்மலர
கமீதுவை பூம்பதக் காநாகை வாழ் அப்துல்
காதிருவே.

என்பது - சிரமிது பூம்பாதமிவையென் றுணர்ந் தறிதற்கரிய காரணராகிய நபிநாயகத்தினது பூமி யினும், வானினுந் தோய்ந்த சிறந்த வரிசையினணை யாக நோயால் வருமெனது துயரத்தின் கட்டுப்பா டற முகத்திடத்தில் வைப்பீராக-வனப்பும், அடை யாளமுமுடைய குளிர்ந்த கையினையே தேனூறிய பூக்களிடத்துத் தேனீக்கள் ஒலிக்கும்பொலிவு மிடமு முள்ள காவுசூழ்ந்த நாகூரில் வாழும் அப்துல்காதி றென்னு மியற்பெய ருடையவரே யென்றவாறு.— கையினன் முகத்தைநீவிக் காத்துக்கொள்வீராக வென்றுகொள்க கம்-சிரம், ஈது - சுட்டுநீண்டது, உவை-பன்மைச்சுட்டு, பூ-மலர், பாதம்-கால், சகம்-பூமி, மீ-வானம், துவைத்தல்-தோய்தல், பூ-சிறப்பு, பதம்-வரிசை, முகம்-ஆனனம், மீது-மேல், வை-வைப்பீராக, பூ-வனப்பு, பதம்-அடையாளம், தண்-குளிர்ச்சி, அகம்-உள்ளடம், ஈ-தேனீ, துவைத்தல்-ஒலித்தல், பூ-பொலிவு, பதம்-இடம். (99)

மாண்டகை தாய்தந்தை மனைகிளை நண்பெல்லாம்
ஆண்டகை யாணைநும் மடைக்கல மென்றது.

காதிரு வேதவ கைநுகர் வோர்நண்பர்
காதலுண் ணீங்

காதிரு வேதவ வாய்தந்தை சுற்றங்
கழலைவிட்டே
காதிரு வேதவ மிக்கடி யேனுங்
கடிகமழ்பூங்
காதிரு வேதவ நாகைய வாணை நுங்
கையடையே.

என்பது-செவிகளாற் பெருமையுடைய வேதங்களின் வகைப்படு பயன்களை யுள்ளத்தி னுகர்வோரும், உறவாளரும், விருப்ப முள்ளத்தி னீங்காத மனைவியும், தவத்தையுடைய தாயுந், தந்தையுங், குடும்பத்தாரும் உங்கள் பாதத்தை விட்டுப் போகாதிராநின்ற பயனிலாக் கருமத்தி னேது மிக்குடைய இவ்வடியவனும், பலவாசனை பரிமளிக்கும் பூக்களுடைய காவுகளின் செல்வமே, மிகுந்த நாகூரினுயகரே, ஆணையாக உங்களடைக்கலமே யென்றவாறு.—வேதப்பயனுகர்வோர் ஆசிரியர், உடன்கற்றோர் மாணாக்கர் எனக் கொள்க-நீங்காத் திருவென்னும் பெயரெச்ச மறையாகிய சொல்லி னெற்றிலவாயிற்று. காது-செவி, இரு-இருமை பெருமை, வேதம்-மறை, வகை-பயன்வகை, நீங்கா-பிரியாத,

திரு-மனைவி, வே-ஏகாரம், தவம்-தவசு, ஆய்-தாய், ஏகாது-போகாது, இரு-இராநின்ற, ஏது-காரணம், அவம்-பயனில்லாமை, கா-காவுகள், திரு-செல்வம், ஏ-தேற்றம், தவ-மிகுதி. (100)

பொருத்து நுங்கருணைப் பொருளே யன்றி
மருத்துவ மின்று மாதவமே யென்றது.

கையடையார்கரந் தண்ணமுதாக்கினிர் கான்மலர்வா
கையடையார்கரந் தாப்பொழிநாகை யகற்றவராக்
கையடையார்கரந் தார்நும்மையன்றினிக்காமருந்தின்
கையடையார்கரந் தந்தருள்வாரெங்கண் மாதவமே.

என்பது-படை வகுப்புடைய பகையரிட்ட நஞ்சத்தினைக் குளிர்ந்த அமுதாக்கினீர், மணக்குமலர்களும், வாகைமரத்தின திலைகளுஞ் சோதியாகிய கிரணத்தைத்தாவும் பொழிலுடைய நாகூரி னுயகரே, ஆயுள்வேதங் கற்றவராகிய வைத்தியர் இவ்வாக்கைக்கு முடிகார் ஒளித்துக்கொண்டார், ஆகையால், உங்களை யல்லாம லினிமேல் காக்கு மருந்துடைய கையாற்சகைக்கும் அடையினை யாவரென் கையிற் றந்து கருணைசெய்வார், எங்கள் மகிமை

யுள்ள தவமாக வந்தவரே யென்றவாறு.—உங்களை யெல்லாம வினியாவர் தந்தருள்வா ரெனக் கூட்டுக, கை-படைவகுப்பு, அடையார் - பகையார், கரம்-நஞ்சம், வாகை-ஓர்மரம், அடை-இலை, ஆர்-சோதி, கரம்-கிரணம், ஆக்கை-உடல், அடையார்-சேரார், கரந்தார்-ஒளித்தார், கை-கரம், அடை-அப்ப வர்க்கம், யார்-யாவர், கரம்-கை. (101)

நாகையந்தாதி முற்றிற்று.



இந்நாகையந்தாதியின் மகத்துவ காரணங்கள் கோடானு கோடியுள்ளன, அவைகளை இந்நூற் பாடிய ஆசிரிய ரவர்களாற் சொல்லிய பாயிரமென்னு முகவுரை யானும், அந்தாதியி னகவற் றுறையா னுங் கண்டுகொள்க.

அல்லாவென்னும் வல்லகடவுள் நன்மைக் குவப் புந், தீமைக்கு வெறுப்புமானவ னாதலால், அவன் அஜலென்னும் விதியன்றி மற்ற மாரணம், பேய், பில்லி, சூனியம், வஞ்சனை, யேவல், தீங்கு, பகை, துன்பம், நோய் முதலிய சங்கடங்கள்யாவு மிவ்வந் தாதியைத் தூய்தாயுற்றுப் படிக்கிற் றீர்ந்து விடு மென்பதற் கியாதொரு சந்தேகமுமில்லை, யிவை யுண்மையென் றெவர்களு மறிவீர்களாக.

---

இதன் விலை அ-12.

கொழும்பு-செட்டித் தெரு, புஸ்தக வியாபாரம்,
அ. அருணாசலம் & ராஜா.

திருமகள் விலாசம் பிரஸ், சென்னை:—1931.

# புத்தக விளம்பரம்



| | ரூ. | அ. |
|---|---|---|
| முஹ்றியித்தீன் மாலை 5 முனாஜாத்துடன் | 0 | 10 |
| இராஜமணிமாலை | 1 | 4 |
| பெரிய திருமுடியிறக்கிய ஹதீது ஆலாவுடன் | 0 | 4 |
| சைத்தூன் கிஸ்ஸா | 0 | 8 |
| சைதத்துப் படைப்போர் | 0 | 8 |
| இரத்தின முகம்மது காரண சரித்திரம் | 0 | 8 |
| காசிம் மாலை தௌகீது பதத்துடன் | 0 | 4 |
| பெண்புத்தி மாலை | 0 | 2 |
| தௌகீது மாலை | 0 | 2 |
| நஸீஅத்து இஸ்லாம் ஹனபிய்யா | 0 | 8 |
| நஸீஅத்து இஸ்லாம் ஷாபிய்யா | 0 | 8 |
| பெரிய மரண விளக்கம் | 0 | 6 |
| பப்பரத்தி அம்மானை | 0 | 6 |
| நூர்மசலா | 0 | 6 |
| மஸ்தான் சாஹிபு பாடல் கலிகா | 1 | 8 |

எமது விலாசம்:—

அருணாசலம் & ராஜா,

புத்தக வியாபாரம், 198, செட்டித் தெரு, கொழும்பு.

